

# சமரசம்

16 - 30 நவம்பர் 2014 ரூ.15/-

மாதம் இருமுறை இதழ்

வெறுப்பின் விதை

## ‘லவ் ஜிஹாத்’

நவீன உலகின் பாதுகாப்புக் கவசம்

## ‘ஹிஜாப்’



• இந்த இதழில்...







# சமரசம்

ஆசிரியர் :
H. அப்துர் ரகீப்

துணை ஆசிரியர் :
A.R. சையத் சுல்தான்

படைப்புகளை அனுப்ப :
samarasam.article@gmail.com

விளம்பரத் தொடர்புக்கு :
M. அப்துல் காதிர்
95661 53142

விளம்பரங்களை அனுப்ப :
samarasam.advt@gmail.com

சந்தா &
விநியோகப் பிரிவு :
044 - 2662 0091

**சந்தா விவரம்**

தனி இதழ் : ரூ. 15
உள்நாடு
ஓர் ஆண்டு : ரூ.350
அரையாண்டு : ரூ.175
வெளிநாடு : ரூ.1900
ஓர் ஆண்டு (விமானம் மூலம்)

பணவிடை, காசோலை, வரைவோலை அனுப்புவோர் **Creative Communication Chennai** எனும் பெயருக்கே அனுப்ப வேண்டும்.

வெளியூர் காசோலை அனுப்புபவர்கள் ரூ.**50** சேர்த்து அனுப்புக.

**சமரசம்**
*138, பெரம்பூர் நெடுஞ்சாலை, சென்னை - 600 012.*
*தொலைப்பேசி : 2662 0091*
*தொலைநகல் : 2662 0682*
*மின்னஞ்சல் :*
samarasam12@gmail.com
*இணையதளம் :*
www.samarasam.net

# பெண்கள் ஆற்ற வேண்டிய மகத்தான கடமை

அனைத்தையும் விட உங்களின் முதல் கவனத்துக்குரியவை உங்கள் குழந்தைகள்தாம்! இறைநெறியை அவர்களுக்குப் புகட்டுவதும், அதற்கேற்ப ஒழுக்கப் பயிற்சியை அவர்களுக்கு அளிப்பதும் உங்களுடைய பெரும் பொறுப்பாகும்.

திருமணமான பெண்கள் மீது மற்றொரு கடமையும் இருக்கிறது. தன் கணவர் சத்தியப் பாதையில் நடைபோடுபவராக இருந்தால், அதில் அவருக்கு அதிகமதிகம் துணைபோக வேண்டும். இன்னும் வேகமாக நடைபோடச் செய்ய வேண்டும். இந்தப் பாதையைக் குறித்து கணவர் அறியாதவராகவோ, அலட்சியம் காட்டுபவ ராகவோ இருப்பின் அவரை நேர்வழியின்பால் ஈர்க்கும் பொறுப்பையும் அப்பெண் ஏற்க வேண்டியதாக இருக்கிறது.

ஒரு பெண் தன் பெற்றோருக்கு உரிய மதிப்பும் மரியாதையும் அளித்தபடியே அவர்களிடத்தில் சத்தியவாக்கை எத்தி வைக்க முடியும். குறைந்தபட்சம் சிறந்த நூல்களை அவர்களுக்குப் படிக்கக் கொடுக்க முடியும்.

இதனை ஒரு கடமை எனக் கருதி நிறைவேற்ற வேண்டும். உங்கள் வீட்டு வேலைகளிலிருந்து எந்த அளவு நேரத்தை மீதப்படுத்த முடியுமோ, அந்த அளவு நேரத்தை ஒதுக்கி வையுங்கள். அந்நேரத்தை இதர பெண்களுக்கு இறைநெறியின் அறிவைப் புகட்டச் செலவிடுங்கள். சிறுமிகளுக்குக் கல்வி புகட்டுங்கள். மூதாட்டி களுக்கும் கல்வியறிவற்ற பெண்களுக்கும், எழுத - படிக்கக் கற்றுத் தாருங்கள். படித்த பெண்களுக்கு இஸ்லாமிய நூல்களை எட்டச் செய்யுங்கள்.

மகளிர் கூட்டங்களுக்கு தொடர்ந்தாற்போல் ஒழுங்காக ஏற்பாடு செய்து அவர் களுக்கு இறைநெறியைப் புரிய வையுங்கள். உரையாற்ற முடியவில்லை என்றால், சிறந்த நூல்களைப் படித்துக் காட்டுங்கள். உங்கள் சக்திக்கேற்ப எந்த அளவு செய்ய முடியுமோ, அந்த அளவு செய்யுங்கள். இவ்வாறு, நீங்கள் அறிமுகமாயிருக்கும் வட்டத்தில் வசிக்கும் பெண்களிடமிருந்து அறியாமையையும், அஞ்ஞானத்தையும் களைய கடும் உழைப்பை மேற்கொள்ளுங்கள்.

கல்வி பெற்ற பெண்களிடம் மற்றொரு கடமையும் இருக்கிறது. ஒரு கோணத் திலிருந்து பார்த்தால் மற்ற பணிகளைவிட இந்தப் பணி அதிமுக்கியம் வாய்ந்ததாக இருக்கிறது. இப்போது மேற்கத்தியச் சிந்தனையால் ஈர்க்கப்பட்ட பெண்கள் பொது வான முஸ்லிம் பெண்களை வழிகேட்டின்பாலும் - வெட்கங்கெட்ட செயல்களின் பாலும் உளரீதியாகவும், ஒழுக்க ரீதியாகவும் கட்டுப்பாடற்ற தன்மையின்பாலும் விரட்டிச் சென்று கொண்டிருக்கின்றனர். உங்கள் முழு ஆற்றலையும் கொண்டு இதனை எதிர்க்க வேண்டும்.

இப்பணியை ஆண்கள் மட்டுமே ஆற்றிட முடியாது. ஆண்கள் இந்த வழிகேட்டை எதிர்த்தால் ‘இது ஆணாதிக்க சமுதாயம்; அவர்கள் உங்களை அடிமைகளாக வைக்கவே விரும்புகிறார்கள். பெண்கள் வீட்டுக்குள்ளேயே இருந்து மடிய வேண்டும்; அவள் மீது சுதந்திரக் காற்றே படக் கூடாது என்பதே அவர்களின் திட்டம்’ எனக் கூறி பெண்கள் ஏமாற்றப்படுகிறார்கள். எனவே, இத்தகைய குழப்பங்களைத் தடுக்க படித்த பெண்களின் உதவி இஸ்லாமிய இயக்கத்துக்கு மிகவும் தேவைப்படுகிறது.

**- மௌலானா சையத் அபுல் அஃலா மௌதூதி (ரஹ்)**

அன்பார்ந்த வாசகர்களே!

நவம்பர், டிசம்பர் மாதங்களில் சந்தா முடிவடையும் வாசகர்கள், தங்கள் பகுதியில் உள்ள கீழ்க்கண்ட 'சமரசம்' முகவர்களைத் தொடர்பு கொண்டு தங்களின் சந்தாக்களைப் புதுப்பித்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

| முகவர் பெயர் | இடம் | தொடர்பு கொள்ள வேண்டிய அலைப்பேசி எண் |
|---|---|---|
| இர்ஷாத் அஹ்மத் | திருச்சி | 8124540488 |
| அப்துர் ரஸாக் | திருச்சி | 9952109026 |
| G.சையத் முஹம்மத் | திருச்சி | 9443592201 |
| அப்துல் ஹமீது | கிருஷ்ணகிரி | 9840841564 |
| மௌலவி அலாவுதீன் | இராமநாதபுரம் | 9894223628 |
| எஸ்.அப்பாஸ் | திண்டுக்கல் | 9944879303 |
| பாஷா / முஹையதீன் குட்டி | மதுரை | 9003888593 |
| A.முஹம்மத் இக்பால் | விருதுநகர் | 9442655786 |
| E.M.அஹ்மத் அலீ | திருநெல்வேலி | 9944112424 |
| காதர் சுலைமான் | காயல்பட்டினம் | 9629699361 |
| மௌலலி அலீ அக்பர் | கன்னியாகுமரி | 8110896616 |
| ஹுஸைனி / சாஜித் | வேலூர் | 9442308501<br>9443356871 |
| ஜமாலுத்தீன் உமரி | உமராபாத்/ஆம்பூர் | 9894176776 |
| முஹம்மத் இப்ராஹீம் | ஈரோடு | 9965079835 |
| மஷ்ஹர் ஷெரீப் | கரூர் | 9842003988 |
| கே.எம்.முஹம்மத் | திருப்பூர் | 9843968332 |
| கே.அப்பாஸ் | கோவை | 9787137778 |
| பாரூக் | நீலகிரி | 9976233445 |
| ஜுல்பிகர் அலீ | விழுப்புரம் | 9442442060 |
| அப்சல் பாஷா | புதுச்சேரி | 9994694111 |
| அப்துல் சலாம் | துவரங்குறிச்சி | 9443154388 |
| ஷபீக்குர் ரஹ்மான் | தஞ்சாவூர் | 9443384984 |
| அபூதாஹிர் ராஜா | தேனி | 9994840040 |
| | | - நிர்வாகம் |

# "அந்த எளிமையின் இலக்கணங்கள் எங்கே? இந்த ஆடம்பர அவதாரங்கள் எங்கே?"




'தனி நீதிமன்றத் தீர்ப்பும் தமிழகமும்' என்ற தலையங்கம் கண்டேன். ஜெயலலிதாவை விடுவிக்கக் கோரி தனியார் பள்ளிகள், தனியார் பேருந்து நிறுவனங்கள், கேபிள் டி.வி. ஆபரேட்டர்கள், வணிகர்கள் ஆகியோர் போராட்டத்தில் ஈடுபடுவது, ஓநாய் நனைகிறதே என்று ஆடுகள் கவலைப்படுகிற மாதிரி என்று சொன்னால் சரியாக இருக்குமா? அது இருக்கட்டும்.

ஜெ. சிறைக்குச் சென்றதை வைத்து அவருக்குத் தியாகி பட்டம் சூட்டி, அரசியல் ஆதாயம் தேட இரத்தத்தின் ரத்தங்கள் முயல்வதைக் குறை சொல்ல முடியாது போலிருக்கிறது. காரணம், 1008, 5008 என்று பால் குடங்களாலும் ஆலயங்கள் நிரம்பி வழிகின்றனவே. என்றாலும், தேச விடுதலைக்காக சத்யாகிரகப் போராட்டங்கள் நடத்தி சிறை சென்று செக்கிழுத்த செம்மல்கள் போன்றவர்களும் தியாகிகள். ஊழல் காரணமாக நீதிமன்றத்தால் தண்டிக்கப்பட்டு சிறை சென்று வசதியான சேர் கேட்டு அமர்பவர்களும் சிறையிலிருந்து காருக்கு வர சிவப்புக் கம்பளம் தேவைப்படுபவர்களும் தியாகிகள் என்றால் கொஞ்சம் நெருடவே செய்கிறது.

கடைசி வரை வாடகை வீட்டிலேயே குடியிருந்த, பிரதமர் பதவி வகித்த மொரார்ஜி தேசாய்களும் நேரம் பார்க்க ஒரு கைக்கடிகாரம் கூட வைத்துக் கொள்ளாத காமராஜர்களும் நினைக்கு வரவே செய்கிறார்கள். அந்த எளிமையின் இலக்கணங்கள் எங்கே, இந்த ஆடம்பர அவதாரங்கள் எங்கே? (66 கோடி எல்லாம் அம்மாவின் கால் தூசுக்கு சமம் என்கிற கிளிஞ்சல்கள் - ஸாரி, நாஞ்சில்களும் உண்டு.)

பொதுவாழ்வில் தூய்மையற்ற தலைகள் எதுவாக இருந்தாலும் சட்டத்தின் முன் நிறுத்தப்பட்டு தண்டிக்கப்படுதலே - விழுமம் சார்ந்த அரசியலுக்கு இலக்கணம் - என்ற தலையங்கக் கடைசி வரிகள் அடிக்கோடிடத் தக்கவை.

*- எஸ்.புருஷோத்தம் ராஜன், பரமக்குடி*

சமரசம் 16-31 அக்டோபர் இதழில் இந்தியாவில் வகுப்புவாதம் தோன்றிய வரலாற்றை எல்லோரும் புரியும் விதத்தில் வெளிச்சம் போட்டுக் காட்டியிருந்தார் சேயன் இப்ராஹீம். வரலாற்று ஆய்வுகள் நன்றாகவே அலசப்பட்டிருந்தன.

மன்னை தாஜுதீனின் 'மூடிமறைக்கும் உடையால் பெண்களுக்கு இழிவா? கட்டுரை இஸ்லாமிய மார்க்கத்தை குறைகண் கொண்டு பார்ப்பவருக்கு சரியான புரிதலைத் தந்திருக்கும்.

இஸ்லாத்தின் மகோன்னதத்தை உணர்ந்தவர்கள் அதை இறுதியில் தழுவிக் கொண்டனர் என்பதுதான் இஸ்லாத்தின் நீண்ட நெடிய வரலாறு. அதை உணரத் தலைப்பட்டிருக்கும் சகோதரி ரேவதி அவர்களுக்கும் அந்தப் பாக்கியத்தை நல்கிட இருகரமேந்தி அல்லாஹ் விடம் பிரார்த்திக்கிறேன்.

*- ஹெச். ஷாஹுல் ஹமீது மிஸ்பாஹி, கொரக்கவாடி*

சொத்துக் குவிப்பு வழக்கில் ஜெயலலிதாவிற்கு வழங்கப்பட்டிருக்கும் தண்டனை நீதியின் முன் அனைவரும் சமம் என்பதையே எடுத்துக்காட்டுகிறது. எனினும் 18 ஆண்டு காலம் நடைபெற்ற இந்த வழக்கைப் பார்க்கும்போது நீதிக்கு என்ன நித்திரை என்று புரியவில்லை. இதுபோன்ற தண்டனையின் மூலம் ஊழலை ஓர் அளவிற்கேனும் ஒழிக்க முடியும். சட்டங்கள் அனைவருக்கும் பொதுவானவை என்பதை உணர்ந்து, அதனை மதித்து நடக்க ஆட்சியாளர்கள் முன்வர வேண்டும். அப்போதுதான் மக்களின் நன்மதிப்பைப் பெற முடியும்.

*- எம்.முஹம்மது கடாஃபி, கொடிக்கால்பாளையம்*

அக்டோபர் 16-31 சமரசம் படித்தேன். மிக அருமை. அஹமத் தாவூத் ஆக்லு அவர்களைக் குறித்தும், அவர் எதிர் நோக்கியுள்ள சவால்கள் குறித்தும் விரிவான தகவல் கிடைத்தது. தமிழகத்துக்கு துருக்கிய அரசியல், அவர்கள் ஆட்சி முறை பற்றிய அறிமுகம் அவசியம் தேவை. அந்த வகையில் இந்தக் கட்டுரையும் அமைந்தது சிறப்பு.

மூன்றாம் பாலினம் உண்டா? கட்டுரையும் இன்றைய காலத்தின் தேவை. திருநங்கைகள் குறித்த மார்க்க நீரோட்டம் என்ன என்பது பலரது கேள்வியாகவே இருந்து வரும் ஒன்று. மேலும் ஆய்வு செய்ய வேண்டும் என்ற ஆர்வம் இந்தக் கட்டுரை மூலம் பிறந்துள்ளது.

இந்தியாவில் வகுப்புவாதம் தோன்றிய வரலாறு அனைத்து மக்களுக்கும் கொண்டு சேர்க்க வேண்டிய தொகுப்பு. இந்து, முஸ்லிம் ஒற்றுமையை சீர்குலைக்க பிரிட்டிஷ்காரர்கள் மட்டுமல்ல, இந்த சித்பவன பிராமணர்களும் போட்டி போட்டு ஒற்றுமையை சிதைத்துள்ளார்கள். அவர்கள் போட்ட நச்சு விதைதான் இன்

றைய பரிவாரக் கூட்டங்கள். இந்தக் கூட்டத்தை நம்பி மக்கள் இவர்களுக்கும் ஒரு வாய்ப்பைத் தந்துள்ளார்கள்.

பாலஸ்தீன வரலாற்றுத் தொடரும் அருமை. அதை முழுவதுமாக தொகுத்து புத்தகமாக வெளியிட வேண்டும். இஸ்ரேல் தோன்றிய வரலாற்றையும், அவர்களின் அட்டுழியங்களையும் உலக மக்களுக்கு சமர்ப்பிக்க வேண்டியது மனிதநேயமுள்ளவர்களின் கடமை. வி.எஸ்.முஹம்மது அமீன் மிக விரிவாக எழுத வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

*- எஸ்.சாகுல் ஹமீது, திருப்பூர்*

சமரசம் 16-31 அக்டோபர் இதழில் முன் அட்டையில் துருக்கி பிரதமர் அஹ்மத் தாவூத் ஆக்லு 'ஆட்சி செலுத்த வரும் அறிவுஜீவி', மூன்றாம் பாலினம் உண்டா? ஆகிய தலைப்புகளைக் கொடுத்து உள்ளே உள்ள பக்கங்களில் மிக மிக விளக்கமாகக் கொடுத்து எங்களை எல்லாம் சமரசம் மாதம் இரு முறை இதழைப் படிக்க வைத்து விட்டீர். தங்கள் சமரசம் மாதம் இரு முறை இதழ் மேன்மேலும் வளர்ச்சி அடைய வேண்டும். என் இனிய பாராட்டுகள்.

*- கவிஞர் கா.திருமாவளவன், திருவெண்ணெய்நல்லூர்*

அஹ்மத் தாவூத் ஆக்லு அவர்கள் துருக்கி பிரதமராகப் பொறுப்பேற்றதற்கு வாழ்த்துகள். அவர் வல்லவர் மட்டுமல்ல நல்லவர் என்பதை அஷ்ரஃப் அழகாகப் படம்பிடித்துக் காட்டுகிறார் முகப்புக் கட்டுரையில்.

மூன்றாம் பாலினம் உண்டா? என்ற ஆய்வு மூலம் அ.முஹம்மது கான் பாகவி அவர்கள் திருநங்கைகளின் உண்மை நிலைமைகளை அழகாக விளக்கியுள்ளார்.

அன்பின் திறவுகோலைத் தொடர்ந்து நான் படித்து வருகிறேன். புன்னகை மன்னன் டாக்டர் ஸலாஹுத்தீன் சுல்தான் அவர்கள் கட்டுரைப்படி நாமும் அன்போடு குடும்பத்தின் உறவைப் பேணி நடப்போம்.

*- E.M. அஹ்மது அலி, மேலப்பாளையம்*

அக்டோபர் 16-31 இதழைப் பார்த்தேன். மூடி மறைக்கும் உடையால் பெண்களுக்கு இழிவு கிடையாது. புர்கா அணிந்து செல்வது இறைவன் கட்டளை. இங்கிலாந்து நாட்டில் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்ட பெண்கள் வீதிகளில் புர்கா அணிந்து செல்வதால் கண்ணியமாக மக்களால் பார்க்கப்படுகிறார்கள். ஆடை கலாச்சாரத்தால் பெண்கள் இழிவடைய வேண்டாம் என்பதே என்னுடைய எண்ணம்.

பெண்கள் ஜீன்ஸ் அணிய வேண்டாம் என்று உலக பெண்களுக்கு அறிவுரை சொல்லும் பாடகர் யேசுதாஸ் அவர்களை நான் உள்அன்போடு பெரிதும் பாராட்டுகிறேன்.

ஜீன்ஸ் அணிவதால் பெண்களை இழிவாக பார்க்கிறார்கள். பெண்கள் நாட்டின் கண்கள். நல்ல சமுதாயத்தை வருங்காலத்தில் உருவாக்கும் பெண்மணிகள் நாட்டின் கண்மணிகள்.

*- திருமதி C.ரேவதி B.Sc., DPTE., மேலப்பாளையம்*

# நேர்வழியைத் தா!

சமரசம் வந்ததும் நான் முதலில் பார்ப்பது கடிதங்கள் பகுதி தான். அதிலும் திருமதி. சி.ரேவதி அவர்களின் கடிதம் வந்திருக்கிறதா என்று பார்ப்பேன். 16-31 அக்டோபர் இதழில் அவர் எழுதிய கடிதம் நெஞ்சைத் தொட்டு விட்டது.

நம்மைப் படைத்த இறைவன் ஒருவனே. அவனுக்கு இணை துணை யாரும் இல்லை. சிந்தித்துப் பாருங்கள். நம்மைப் படைத்த அவனை விட்டுவிட்டு என்னை வணங்கு என்பது சரியா? ஒன்றை படைத்து அதை நாம் வணங்குவது சரியா? சகோதரி ரேவதி அவர்களே உங்கள் கடிதம் படித்ததும் நான் இறைவனிடம் இவ்வாறு பிரார்த்தனை செய்தேன். இறைவா நீ இவருக்கும் நேர்வழியைத் தா!

அன்பு சகோதரியே நிறைய மனிதர்களுக்கு இஸ்லாம் கடினமாகத் தோன்றலாம். தாடி வைத்த ஆண்களும், கருப்புற நிற பர்தா அணிந்த பெண்களும் கோடை வெயிலில் எப்படி நடக்கின்றனர் என்று கேட்பவர் உண்டு. இவ்வுலகில் சகித்துக் கொள்கிறோம். மறுமையின் வெற்றிக்காக. நீங்கள் மறு ஜென்மம் உண்டு என்று நம்புகிறீர்கள். நாங்கள் மறு உலகம் உண்டு என்கிறோம். அந்த உலகில் சுவர்க்கம் உண்டு, பர்தா இல்லை. விதவிதமான பட்டாடை உண்டு. நோய் இல்லை, மரணம் இல்லை. இதற்காகத்தானே இந்த உலகில் உள்ள இன்னல்களையெல்லாம் சகித்துக் கொள்கிறோம்.

பிரபல எழுத்தாளர் கமலாதாஸ் அவர்கள் எத்தனை மாடலாக இருந்தார்கள். இறைவன் அவருக்கு நேர்வழியைக் கொடுத்தான். அவர் சுரையாவாக மாறி இஸ்லாத்தை முழுக்க முழுக்க ஏற்றார்.

*- பாத்திமா முஹம்மத், கோவை - 8*

ஆட்சி செலுத்த வரும் அறிவுஜீவி துருக்கி பிரதமர் அஹ்மத் தாவூத் ஆக்லு அவர்கள் பதவி ஏற்றதற்கு என்னுடைய வாழ்த்துகள். அவரைக் குறித்து முகப்புக் கட்டுரை மூலம் தமிழக மக்களுக்கு அறிமுகப்படுத்தியுள்ளார் அஷ்ரஃப்.

சாதனைப் பெண் சுவர்ணலட்சுமிக்குப் பிறவிலேயே கண் பார்வை இல்லை. ஆனாலும் அவர்களின் உயர்ந்த உள்ளத்தைக் கண்டு பெருமிதம் கொள்கிறேன். அதே போல் நாமும் பிறருக்கு உதவுவோம்.

*- திருமதி N.சபீதாகான் M.A., PGDCA., மேலப்பாளையம்*

மூடி மறைக்கும் உடையால் பெண்களுக்கு இழிவா? இல்லவே இல்லை என்பதை மிக வலிமையான கருத்துகளால் மிகவும் யதார்த்தமாகவும் தத்ரூபமாகவும் தொகுத்தளித்த மன்னை தாஜுதீன் அவர்களுக்குப் பாராட்டுகள்.

தவறு எனத் தெரிந்தும் நியாயப்படுத்தும் பெண்கள்,

வீம்புக்கு பேசும் பெண்கள், சட்டங்கள் தெரியாத பெண்கள், தெரிந்தும் செயல்படுத்தாத பெண்கள், ஆண் - பெண் சமம் என்று வாழ்வின் சரிவிற்கு செல்லும் பெண்கள், தன் மனதைத் தெய்வமாக்கிக் கொள்ளும் பெண்கள் என பலதரப்பட்ட பெண்களின் மன நிலையை மிக தத்ரூபமாகக் கொண்டு வந்து நிறுத்தியது அவரது எழுத்தின் தனிச்சிறப்பு என்றே கூறலாம்.

மூன்றாம் பாலினம் என்று சொல்லக் கூடியவர்களைக் காணும்போது, யா அல்லாஹ் இந்த நிலைமையை யாருக்கும் தராதே என்று துஆ செய்வதுண்டு. அவர்களில் இவ்வளவு விஷயங்கள் இருக்கின்றன என்பது கண்டு வியப்பு. பல தகவல்களைத் தரும் சமரசத்திற்கு வாசகர்கள் சார்பில் பாராட்டுகள்.

*- ஐ.சாந்த் உஸ்மானி, ஆலந்தூர்*

'சமரசம் 16-31 அக்டோபர் இதழ் படித்தேன். 'மூன்றாம் பாலினம் உண்டா?' என்பதை இனிது வழங்கிய கான் பாகவி அவர்களை பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

திருநங்கைகள் ஆண்களைப் போலவே இருப்பார்கள். அவர்களை நாம் அன்போடு நடத்த வேண்டும் என்பதே என்னைப் போன்ற மருத்துவர்களின் கருத்து.

''போர்க்களத்தின் செய்திகள்'' மூலம் பாலஸ்தீன் மக்களின் உண்மை நிலைகளையும் இஸ்ரேல் இராணுவத்தின் அடாவடித்தனத்தையும் தோல் உரித்துக் காட்டியுள்ளார் வி.எஸ்.முஹம்மத் அமீன்.

அன்பின் திறவுகோல் தொடரில் ஆளுமைத் திறமைகளை டாக்டர் ஸலாஹுத்தீன் சுல்தான் அழகாகவும் அருமையாகவும் விளக்குகிறார்.

*- டாக்டர் முஹம்மது பைசல் பஷீர் MBBS.,*
*திருநெல்வேலி அரசு மருத்துவமனை*

சமரசம் அக்டோபர் 16-31 இதழ் பார்த்தேன். படித்தேன். வியந்தேன். அனைத்துப் பகுதிகளும் பயனுள்ளதாகவே இருந்தன.

''தனி நீதிமன்றத் தீர்ப்பும் தமிழகமும்'' என்ற தலையங்கத்தில் தமிழகத்தல் நடப்பது தனிநபர் வழிபாடு என்பதையும் சட்டத்திற்கு எதிரான போராட்டம் தவறானது என்பதையும் தெளிவாகக் குறிப்பிட்டிருந்தீர்கள்.

இனி அம்மா உணவகத்தில் எனும் தலைப்பில் திரு. மா.சுரேஷ் அவர்கள் எழுதியிருந்த கட்டுரை எனக்கு சற்று முரண்பாடாகவே தோன்றுகிறது.

ஆசிரியர்களின் வேலை நாள்கள் ஓராண்டில் 200 நாள்களுக்கும் குறைவு. பாடவேளைகளும் ஒரு நாளைக்கு 6 தான். ஆனால் அவர்கள் பெறும் சம்பளமோ மிக மிக அதிகம். இந்நிலையில் ஆசிரியர்களுக்கு அதிக வேலை உள்ளது எனக் கூறுவதை எவ்வகையில் ஏற்க முடியும்? உழைப்புக்கேற்ற ஊதியம் என்பார்கள். இன்றைய சூழலில் அரசுப் பள்ளிகளில் படிக்கும் மாணவர்கள் எண்ணிக்கை எவ்வளவு? அதற்காகப் பணியாற்றும் ஆசிரியர்களின் செயற்பாடு எவ்வாறு உள்ளது என்பதை நாம் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம். என்னைப் பொறுத்தவரை உளவியல் கல்வியை முதலில் ஆசிரியர்கள் பயில வேண்டும். அரசு மாணவர்களுக்கு வழங்கும் சலுகைகளை ஆசிரியர்தான் மாணவர்களிடத்தில் கொண்டு சேர்க்க வேண்டும்.

மாணவர்களுக்கு நல்வழிகாட்டுவதை பணிச் சுமையாக கருதும் ஆசிரியர்கள் எவ்வாறு நல்லாசிரியராக இருக்க முடியும். 'ஆசிரியர் பணி' என்பது ஓர் அறப்பணி. அதை மாணவர்களுக்கு அர்ப்பணி என்பது தமிழறிஞர்களின் கருத்தாகும். இதனை ஒவ்வொரு ஆசிரியரும் உணர வேண்டும்.

புத்தகத்தில் உள்ளதை மட்டும் போதிப்பவர்கள் சிறந்த ஆசிரியர்களாக இருக்க முடியாது. வாழ்க்கை சார்ந்த தத்துவங்களை மாணவர்களிடம் ஏற்படுத்துபவரே சிறந்த ஆசிரியர்.

மூன்றாம் பாலினம் உண்டா எனும் தலைப்பில் கான் பாகவி அவர்கள் எழுதியிருந்த கட்டுரை அறிவியலுக்கும் ஆன்மிகத்திற்கும் ஓர் பாலம் அமைந்திருந்ததைப் போன்று உணர்ந்தேன்.

'இந்தியாவில் வகுப்புவாதம் தோன்றிய வரலாறு' எனும் தலைப்பில் சேயன் இப்ராஹீம் அவர்கள் எழுதியிருந்த கட்டுரை இஸ்லாமியர்களுக்கு வரலாற்று ஆவணம்.

'செயலா? அறிவா? எனும் தலைப்பில் நூஹ் மஹ்ழரி அவர்கள் எழுதியிருந்த கட்டுரை மிகவும் அற்புதம். 'ஞானமில்லாத செயல் மூடர்களின் செயல்' என்பதை அழகாக அல்குர்ஆனின் ஆதாரத்துடனும் நபி காட்டிய நல்வழியின் மூலம் விளக்கியிருந்தார்கள்.

*- ஏ.எம். தமீம் அன்சாரி, பரமக்குடி*

சமரசம் அக்டோபர் 16-31 இதழ் படித்தேன். மூடி மறைக்கும் உடையால் பெண்களுக்கு இழிவா? மன்னை தாஜுத்தீன் கட்டுரை அருமை.

அதாவது எங்களூர் காயல்பட்டினப் பெண்கள் ஹிஜாப் விஷயத்தில் பேணுதல் உள்ளவர்கள்தாம். இருந்தாலும், எந்த நோக்கத்திற்காக ஹிஜாபை பெண்கள் அணிய வேண்டுமோ, அதன் பயனை எங்கள் பெண்களிடம் காண முடியவில்லை என்பது வருத்தத்தைத் தருகிறது.

*- M.A.K.காதர் சுலைமான், காயல்பட்டினம்*

சமரசம் அக்டோபர் 16-31 இதழில் அழைப்பியல் பகுதியில், சுவனத்தை நோக்கிப் பயணித்த கதையை அப்துல் வலீ கோமெஸ் அழகாக விளக்கியுள்ளார். அவரது பயணம் இதயத்தை நெகிழச் செய்துவிட்டது. மொழிபெயர்ப்பாளருக்குப் பாராட்டுகள்.

முஹம்மது கான் பாகவியின் 'மூன்றாம் பாலினம் உண்டா?' எனும் ஆய்வு அவரது தீர்க்கமான நோக்கை காட்டுகிறது. இவ்வாறான நுணுக்கமான சட்டங்களை தமிழில் தந்த பாகவி அவர்களுக்கு பாராட்டுகள்.

*- அப்துல் பாஸித், கோழிக்கோடு*

16 - 30
நவம்பர் 2014

وَقُولُوا قَوْلًا سَدِيدًا

சொல்வதைத் தெளிவாக - நேரடியாகச் சொல்லுங்கள்

முஹர்ரம் 22 - ஸபர் 7
ஹிஜ்ரி 1436



சரம் : 35

# எகிறிக் குதிக்கும் மருந்துவிலை; கதறி அழும் நோயாளிகள்



மலர் : 11

மருத்துவச் செலவை மேலும் அதிகரிக்கும் விதத்தில் மத்திய, மாநில அரசுகள் எடுக்கும் முடிவுகள் மக்கள் விரோதச் செயல் ஆகும். அரசின் கட்டுப்பாட்டில் இருந்த மருந்துகள் மீதான விலை நிர்ணய உரிமையை மத்திய அரசு ரத்து செய்து ஏழை எளிய மக்களை வஞ்சித்துள்ளது. இந்தியாவில் பரவலாக இருக்கும் புற்றுநோய், இரத்த அழுத்தம், மாரடைப்பு, நீரிழிவு ஆகிய நோய்களுக்கான மருந்து விலையை உயர்த்த வேண்டும் என பன்னாட்டு மருந்து தயாரிப்பு நிறுவனங்கள் வற்புறுத்தி வந்தன. அதற்கு மோடி அரசு அடிபணிந்துள்ளது வெட்கக்கேடு.

பிரதமர் மோடி, அமெரிக்கப் பயணம் செல்வதற்கு முன், உயிர்காக்கும் மருந்துகள் உள்பட 108 மருந்துகளின் விலையை, தேசிய மருந்துவிலை நிர்ணய ஆணையத் திடமிருந்து (National Pharmaceutical Prising Authority - NPPA) பறித்துவிட்டார். இதற்கு முன்,விலை நிர்ணய உரிமை அரசு ஆணையத்திடம் இருந்ததால். அமெரிக்க மருந்து நிறுவனங்கள் இஷ்டப்படி விலையை உயர்த்த முடியவில்லை. இந்த உரிமையை ரத்து செய்யும்படி மருந்து நிறுவனங்களும் அமெரிக்க அரசும் பல ஆண்டு களாகத் தொடர்ந்து வலியுறுத்தியபோதிலும், இந்தியா செவிசாய்க்கவில்லை. ஆனால், 'திறமையான பிரதமர்' மோடி அதற்கு அடிபணிந்துவிட்டதால், ஏழைகளால் தாங்கிக் கொள்ள முடியாத அளவுக்கு அத்தியாவசிய மருந்துகளின் விலைகள் அதிகரித்து வருகின்றன. புற்று நோய் மருந்தான 'கிலிவெக்'கின் விலை 8500 ரூபாயி லிருந்து ஒரு இலட்சத்து எட்டாயிரமாக அதிகரித்துள்ளது.

முன்பு, ஒன்றேகால் இலட்சம் ரூபாய்க்கு விற்கப் பட்ட இந்த மருந்தின் விலை, என்.பி.பி.ஏ.வின் கட்டுப் பாட்டின்கீழ் வந்தபோது கணிசமாகக் குறைந்தது. இந்த அதிகாரம் இப்போது பறிக்கப்பட்டுவிட்டதால் மீண்டும் பன்னாட்டு நிறுவனங்கள் நோயாளிகள் மீது ஆதிக்கம் செலுத்தத் தொடங்கிவிட்டன. இதர மருந்துகளின் விலைகளும் மளமளவென அதிகரித்து வருகின்றன.

மத்திய அரசின் இந்த நடவடிக்கை வேறு பல விபரீதங்களையும் ஏற்படுத்தும். இந்திய-அமெரிக்க வர்த்தக உறவை வலுப்படுத்துதல் என்ற பெயரில், அறிவுசார் சொத்துரிமை விஷயங்களில் முடிவெடுக்கும் உரிமையை அரசு இழந்துவிடும். இது இந்தியாவின் காப்புரிமையைக் கடுமையாகப் பாதிக்கும். மருந்து விவ காரத்தில் மத்திய அரசு எடுத்துள்ள நடவடிக்கையைப் போன்றே, வேறு பல விவகாரங்களிலும் அமெரிக்காவின் முடிவுக்கு இணங்கி நடக்கவேண்டிய நிலை ஏற்படும்.

மருந்து விவகாரத்தில் இப்போது எடுத்துள்ள முடிவு, இதுதொடர்பாக நிலுவையில் உள்ள வழக்குகளைப் பலவீனப்படுத்தும். அரசின் விலை நிர்ணய உரிமைக்கு எதிராக, பன்னாட்டு நிறுவனங்கள் மும்பை, தில்லி நீதி மன்றங்களில் வழக்குத் தொடுத்துள்ளன. அந்த வழக்குகளில் அரசு தோல்வியடையும். அறிவுசார் சொத் துரிமை விஷயங்களில் முடிவெடுக்கும் உரிமை பறிபோவ துடன், பெரும் நிறுவனங்கள் - குறிப்பாக அமெரிக்க நிறுவனங்கள் ஏகபோக உரிமையைப் பெறும்.

''விலை நிர்ணய உரிமை ரத்து செய்யப்படவில்லை; 108 மருந்துகளை விலை நிர்ணய வரம்புக்குள் கொண்டுவர வேண்டும் என்ற பரிந்துரை மட்டுமே திரும்பப் பெறப்பட்டுள்ளது'' என்ற விஞ்ஞான ரீதியான விளக்கத்தில் நியாயம் இல்லை. மருந்து விலை உயர்ந்துள்ளது என்பது உண்மை. அரசு எதையும் செய்யாமல் ஒரு பார்வையாளனைப் போல் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறது என்பதும் உண்மை.

பங்குச்சந்தையில் பன்னாட்டு மருந்து நிறுவனங் களின் பங்கு விகிதம் அதிகரிக்கும் அளவுக்கு நோயாளி கள் மேலும் மேலும் வேதனைகளை அனுபவிக்கின்ற னர். இதற்கு ஒரே தீர்வு, மருந்துகளின் விலையை நிர்ண யிக்கும் உரிமையை அரசே ஏற்பதுதான். சுகாதாரத் துறையை வணிகச்சட்டங்களால் நிர்வகிக்கத் தேவை யில்லை என்பதை அரசுக்கு உணர்த்த அரசியல் கட்சி களும் மக்கள் பிரதிநிதிகளும் களம் காணவேண்டும். பொதுமக்களின் நலவாழ்வு என்பது சேவைத் துறையைச் சேர்ந்தது. சிகிச்சை முறைகளையும் மருத்துவச் செலவு களையும் தீர்மானிக்க வேண்டியது வணிகச் சந்தையோ, விற்பனைப் பொருள்களோ அல்ல. எனவே, மத்திய சுகா தாரத் துறை மக்கள் பக்கம் நிற்கவேண்டும். கடுமையான மக்கள் போராட்டங்கள் நடைபெறவில்லை எனில், மருந்து நிறுவனங்கள் கொள்ளை இலாபம் அடை வதற்கு உதவும் கருவிகளாய் ஏழை நோயாளிகள் மாறுவர். மருத்துவ முறைகளும் மாறும். நோயாளி களைப் பிணைக் கைதிகளாக்கி, அமெரிக்காவுடன் வர்த்தக உறவை மேம்படுத்த வேண்டுமா?

# வெறுப்பின் விதை ‘லவ் ஜிஹாத்’

● நெல்லை சலீம்




ஒரு பொய்யைத் திரும்பத் திரும்பச் சொன்னால், அது உண்மையாகி விடும் என்பது கோயபல்ஸின் கூற்று. இதனைத்தான் நமது நாட்டில் இந்துத்துவ அமைப்பினர் கையாண்டு வருகின்றனர். இப்போது மட்டுமல்ல, நாட்டு மக்கள் விடுதலைப் போராட்டத்தில் முனைப்புடன் ஈடுபட்டுக் கொண்டிருந்த காலம் முதற் கொண்டே இந்த உத்தியை அவர்கள் கையாண்டு வருகின்றனர்.

விடுதலைப் போராட்டத்தில் இந்திய முஸ்லிம்கள் ஆற்றிய மகத்தான பங்களிப்பை மறைத்து விடவும், இந்துக்களும் முஸ்லிம்ளும் இந்தியாவில் ஒற்றுமையாக வாழமுடியாத ஒரு சூழ்நிலையை ஏற்படுத்தவும் திட்ட மிட்ட முறையில் செய்யப்பட்ட சூழ்ச்சியே காந்தியின் படுகொலை. நாதுராம் கோட்சே என்ற இந்துத்துவ வெறியனால் மூன்று துப்பாக்கிக் குண்டுகளால் சுடப்பட்டுக் கொல்லப்பட்டார் காந்தி. அந்த நாதுராம் கோட்சே தனது கையில் இஸ்மாயில் என்று பச்சை குத்திக்கொண்டு, தாடி வைத்துக்கொண்டு, தொப்பி அணிந்து கொண்டு மொத்தத்தில் ஒரு முஸ்லிமின் தோற்றத்தில் வந்து காந்தியை சுட்டுக்கொன்றான்.

காந்தியைக் கொன்றது ஒரு முஸ்லிம்தான் என மக்கள் நம்ப வேண்டும். அப்போதுதான் இந்து முஸ்லிம் ஒற்றுமை குலையும் என்பதே அவன் சார்ந்த இயக்கத்தின் திட்டமாக இருந்தது. நல்ல வேளையாக அந்த எண்ணம் பலிக்கவில்லை. உடனடியாகச் செயல்பட்ட ஆங்கிலேய அரசு, குற்றவாளி முஸ்லிம் அல்ல. நாதுராம் கோட்சே என்பவன்தான் படுகொலை செய்தான் என்பதை உலகுக்குத் தெரிவித்தது. அந்தப் பாவக்கறை அப்போதே துடைத்தெறியப்பட்டது. அப்போதே துடைக்கப்பட்டிருக்கவில்லை என்றால், இன்று வரை முஸ்லிம்கள் காந்தியைக் கொன்ற வாரிசுகள் என அழைக்கப்பட்டிருப்பார்கள்.

அதன்பிறகு, இந்தியா, பாகிஸ்தான் பிரிவினை. இதிலும், இந்துத்துவவாதிகளின் கைதேர்ந்த அரசியல் இருக்கின்றது என்பதை வரலாற்றைப் படித்தவர்கள் நன்கு உணர்ந்திருக்கின்றனர். முஹம்மத் அலீ ஜின்னா போன்றவர்களுக்கு நாட்டைப் பிரிப்பதில் விருப்பமில்லையென்றாலும், அதை ஒரு வாய்ப்பாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள். அந்தக் குற்றச்சாட்டு முஸ்லிம்கள் மீது இன்றும் நீடித்துக் கொண்டிருக்கிறது.

இதுபோன்று, பல்வேறு பொய்யான பரப்புரைகளின் மூலம், தேசிய நீரோட்டத்திலிருந்து முஸ்லிம்களைத் தனிமைப்படுத்தும் முயற்சியில் இந்துத்துவவாதிகள் தீவிரமாகக் களப்பணியாற்றி வந்துள்ளனர். அதன் ஒரு பகுதியாக, லவ் ஜிஹாத் எனப் பெயரிட்டு 2009 ஆம் ஆண்டிலிருந்து ஒரு புதிய அவதூறைப் பரப்பி வருகின்றனர்.

இந்துப் பெண்களை, முஸ்லிம் இளைஞர்கள் காதலித்து, மதம்மாற்றித் திருமணம் செய்து கொள்கின்றனர் என்பதே அந்த அவதூறின் சாராம்சம். அண்மைக் காலமாக செய்தி ஊடகங்களில் ‘லவ் ஜிஹாத்’ என்ற சொற்றொடர் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. முஸ்லிம்களையும் இஸ்லாத்தையும் கொச்சைப்படுத்தும் நோக்கத்துடனே இந்தப் பரப்புரை அமைந்திருப்பதைக் காண முடிகிறது.

இந்த அவதூறுப் பரப்புரையை 2009இல் இந்துத்துவவாதிகள் தொடங்கினர். கேரளாவிலும் கர்நாடகாவிலும் ‘லவ் ஜிஹாத்’ அதிகமாக நடைபெறுகிறது. கல்லூரிகளில் படிக்கும் இந்து இளம்பெண்கள் முஸ்லிம் இளைஞர்கள் மீது காதல் வயப்பட்டு, பின்னர் கட்டாய மதமாற்றம் செய்யப்படுகின்றனர் என்று இந்துத்துவ அமைப்புகள் குற்றம் சாட்டி பரப்புரை செய்தன. முஸ்லிம் இளைஞர்கள் மீது தவறான எண்ணத்தை ஏற்படுத்தி, பொதுப் பணிகளில் முஸ்லிம் இளைஞர்கள் ஈடுபடுவதைத் தடுக்க இதனை ஒரு வாய்ப்பாகப் பயன்படுத்தின.

கேரளாவில் இந்த அவதூறுப் பரப்புரை உச்சத்தை அடைந்தபோது, கேரள உயர்நீதிமன்றம் அம்மாநிலக் காவல்துறைத் தலைவருக்கு ஓர் உத்தரவைப் பிறப்பித்தது. இந்த அவதூறுப் பரப்புரையில் குறிப்பிடப்பட்டுள்ள தகவல்கள் சரிதானா என்பதை விசாரித்து, இது தொடர்பாக ஒரு முழுமையான அறிக்கையை நீதிமன்றத்தில் தாக்கல் செய்யவேண்டும் என்றது. கேரள டி.ஜி.பி. ஜேக்கப் புன்னூஸ் நன்கு விசாரணை நடத்தி, பல்வேறு ஆய்வுகளுக்குப் பிறகு அறிக்கையைத் தாக்கல் செய்தார்.

அவர் அளித்த அறிக்கையில், 'லவ் ஜிஹாத்' என்ற நிகழ்வு கேரளாவில் நடந்ததாக எந்தப் புகாரும் இல்லை; அதுபோன்ற எந்த நிகழ்வும் கேரளாவில் நடைபெறவில்லை. மாநிலத்தில் சட்டம் ஒழுங்கைச் சீர்குலைக்க இந்துத்துவ அமைப்புகள் மேற்கொண்ட திட்டமிட்ட அவதூறுப் பரப்புரை இது என்று குறிப்பிட்டிருந்தார். கேரளாவில் அவர்கள் மேற்கொண்ட திட்டம் வெற்றி பெறவில்லை. ஆனாலும், அந்த அவதூறை அவர்கள் கைவிடவில்லை.

கர்நாடகாவிலும் இதே அவதூறைப் பரப்ப, மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சு போட்டன. 2009 இல் அனிதா என்ற பெண் திடீரெனக் காணாமல் போய்விட்டாள். இதைப் பயன்படுத்திக் கொண்ட இந்துத்துவ அமைப்புகள் 'லவ் ஜிஹாத்'தான் இதற்குக் காரணம் என்ற அவதூறைக் கிளப்பினர். 'அனிதாவை, பாகிஸ்தானால் காதல் செய்யப் பயிற்றுவிக்கப்பட்ட ஒருவன்தாம் கட்டாய மதமாற்றம் செய்து, கடத்திச் சென்றுவிட்டான்' என ஊளையிடத் தொடங்கினர்.

அக்டோபர் 4ஆம் நாள், குருபுராமத் என்ற அமைப்பின் தலைவர் ராஜசேகர நந்தா என்பவரும் தம் பங்குக்கு ஓர் ஆர்ப்பாட்டத்தை நடத்தி அதில், 'அனிதா தீவிரவாத விளையாட்டிற்குப் பலியாகிவிட்டார்' எனக் கதறினார்.

அனிதா மாயமானது ஒரு மதரீதியானப் பிரச்னையாக உருமாறுவதை உற்றுநோக்கிய கர்நாடகக் காவல்துறை அதிகாரிகள் உடனடியாக சிறப்புப் புலனாய்வுக் குழுவை அமைத்து விசாரணை நடத்தினர். சிறப்புப் புலனாய்வுக் குழுவினர் இரண்டே வாரங்களில் அனிதாவின் சாவுக்குக் காரணமானவர் மோகன்குமார் என்ற உண்மையை வெளிக்கொணர்ந்து சங்பரிவார் கும்பல்களின் பித்தலாட்டத்தை அம்பலப்படுத்தினார்கள்.

கொலையாளி மோகன்குமார் என்பவன் இதுவரை 17 பெண்களைத் திருமணம் செய்து கொள்வதாக ஏமாற்றிக் கற்பழித்து, கொலையும் செய்துள்ளான். அனிதாவையும் இதே போன்று ஏமாற்றிக் கொலை செய்துள்ளான். ஆனால், அனிதாவுடைய விஷயத்தில் அவன் வசமாக சிக்கிக் கொண்டான். அக்டோபர் 21 ஆம் நாள் காவல்துறையினர் இவனைக் கைது செய்தனர்.

காவல்துறை உயரதிகாரி ஒருவர் கூறும்போது, ''அனிதாவின் கொலை தொடர்பான விசாரணைத் தகவல்கள் 'லவ் ஜிஹாத்' என்ற வதந்திக்கு முற்றுப்புற்றி வைத்துவிட்டது. கலப்புத் திருமணங்களை எதிர்க்கின்ற சில மதஅடிப்படைவாதக் குழுக்கள் அவர்களின் எதிர்ப்பை வெளிப்படுத்துவதற்காக 'லவ் ஜிஹாத்' என்கிற ஒரு புதுஉத்தியினைப் பரப்பி வருகின்றார்கள்'' என்று கூறினார். கர்நாடகாவிலும் பருப்பு வேகாததால் மூக்குடைபட்ட சங்பரிவார அமைப்புகள் அதோடு நிறுத்திக் கொள்வார்கள் என்று நினைத்தால் மறுபடியும் அவதூறைத் தொடங்கியுள்ளனர்.

**சட்டம் ஒழுங்கைச் சீர்குலைக்க இந்துத்துவ அமைப்புகள் மேற்கொண்ட திட்டமிட்ட அவதூறுப் பரப்புரை இது**

ஹிந்து ஜனகுருதி சமிதி என்ற அமைப்பு ஒரு புது கண்டுபிடிப்பை அறிமுகப்படுத்தியது. அதாவது, தீவிரவாதிகளால் ஓராண்டுக்கு முன் தொடங்கப்பட்ட 'லவ் ஜிஹாத்' என்ற இயக்கத்தினால் தெற்குக் கர்நாடகத்தில் 3,000 இந்துப் பெண்களும், இதர மாநிலங்களில் 30,000 இந்துப் பெண்களும் காணாமல் போய்விட்டதாகக் கதை கட்டினர். அத்துடன் விட்டுவிடாமல், காவல்துறை ஆணையர் அலுவலகம் முன் இக்கதையை முன்னிறுத்தி அக்டோபர் 15 அன்று ஆர்ப்பாட்டமும் செய்தனர்.

ஆனால், அதிகாரபூர்வ அறிக்கையின்படி, கடந்த மூன்றாண்டுகளில் அதாவது செப்டம்பர் 30, 2009 வரையில் தெற்குக் கர்நாடகாவில் 404 பெண்கள் மட்டுமே காணாமல்போய் உள்ளனர். அதிலும் 332 பெண்கள் காவல்துறையினரால் மீட்கப்பட்டு விட்டனர்.

அக்டோபர் 21 அன்று காவல்துறையினரால் நடத்தப்பட்ட கருத்தரங்கில், தெற்குக் கர்நாடகாவில் தற்போது 57 பெண்கள் மட்டுமே காணாமல் போனவர்கள் பட்டியலில் இருப்பதை உறுதிப்படுத்தினர். காவல்துறைக் கண்காணிப்பாளர் ஏ.எஸ்.ராவ் கூறுகையில், ''காணாமல் போனவர்களில் மீதியுள்ள 57 பெண்களும் தற்கொலை செய்திருக்கலாம் அல்லது வேறு யாருடனாவது மறைந்து வாழ்ந்து கொண்டிருக்கலாம். குறிப்பாக, இந்துப் பெண்கள் அதிகமாக இந்து ஆண்களுடன்தான் ஓடிப்போயுள்ளனர்'' என்றார்.

இப்படி கர்நாடகாவில் பல்வேறு பொய்ப் பரப்புரைகளை மேற்கொண்டனர். இதையே சாக்காக வைத்து பல்வேறு பகுதிகளில், முஸ்லிம் இளைஞர்கள் மீது கொடூரத் தாக்குதலை நடத்தினர். கல்லூரிகளிலும், வகுப்பறைகளிலும் தாக்கப்பட்டுள்ளனர் முஸ்லிம் இளைஞர்கள். தற்போது இந்த அவதூறை நாடு முழுவதும்

பரப்ப தீவிரம் காட்டி வருகின்றனர். உ.பி, ம.பி, மராட்டியம், தில்லி ஆகிய மாநிலங்களிலும் 'லவ் ஜிஹாத்' என்ற பரப்புரையை மேற்கொண்டு வருகின்றனர். இதனால், பள்ளிக்கூடம், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் ஆகியவற்றில் முஸ்லிம் இளைஞர்கள் புறக்கணிக்கப்படும் சூழ்நிலை ஏற்படும்.

இதுதொடர்பாக, இந்தியன் எக்ஸ்பிரஸ் நாளிதழில் பாரதிய ஜனதாவின் தேசிய துணைத்தலைவர் கட்டுரை ஒன்றை எழுதியிருந்தார். அதில், எந்த அளவுக்கு முஸ்லிம்களைக் கொச்சைப்படுத்த முடியுமோ அந்த அளவுக்குக் கொச்சைப்படுத்தி எழுதி இருந்தார். உ.பி.யில் ஒரு இளம்பெண்ணை முஸ்லிம் இளைஞர் ஒருவர், காதலித்து, வலுக்கட்டாயமாகக் கடத்திச் சென்று கற்பழித்து, மதம் மாற்றினார் என அந்தப் பெண் காவல் நிலையத்தில் புகார் கொடுத்துள்ளதாக அதில் அவர் குறிப்பிட்டிருந்தார்.

அதுமட்டுமின்றி, இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டவர்கள் தொடர்பாகவும், இங்கிலாந்து போன்ற நாடுகளில் இஸ்லாத்தை ஏற்பவர்களின் எண்ணிக்கை அதிகமாகி வருவதாகவும், கிறிஸ்தவ ஆலயங்களை விட பள்ளிவாசல்கள் பெருகி வருவதாகவும் எழுதி இருந்தார். இதில் இன்னும் ஏராளமான பொய்களையும் அவிழ்த்துவிட்டிருந்தார். அதற்கு, ஹிந்து ஆங்கில நாளேடு சரியான பதில் கொடுத்திருந்தது. உ.பி.யில் அப்படி ஒரு நிகழ்வே நடைபெறவில்லை என்றும், தாங்கள் விரும்பும் மதத்தை ஏற்றுக் கொள்வது அவரவர் உரிமை என்றும் அழகாகப் பதிவு செய்திருந்தது.

இதன்மூலம், தங்களின் அரசியல் ஆதாயத்துக்காக முஸ்லிம்களுக்கெதிரான கலவரச் சூழலை உருவாக்கி வருகின்றனர். இதன் ஒரு பகுதிதான் இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு நடைபெற்ற முஸஃப்பர் நகர் கலவரம். இன்றும், அந்தப் பகுதியில் கலவரச் சூழல் மாறவில்லை.

'லவ் ஜிஹாத்' என்ற வார்த்தையைப் பயன்படுத்தி, இந்துத்துவா அமைப்புகள் ஒவ்வொரு தனிமனிதனின் உரிமையிலும் விருப்பத்திலும் கை வைக்கின்றனர். இந்தியத் திருநாட்டில் யார் வேண்டுமானாலும், எந்த மதத்தையும் பின்பற்றலாம், திருமணம் முடிக்கலாம்.

**“கலப்புத் திருமணங்களை எதிர்க்கின்ற சில மதஅடிப்படைவாதக் குழுக்கள் அவர்களின் எதிர்ப்பை வெளிப்படுத்துவதற்காக ‘லவ் ஜிஹாத்’ என்கிற ஒரு புதுஉத்தியினைப் பரப்பி வருகின்றார்கள்”**

இதைத் தடுப்பதற்கான உரிமையை இந்துத்துவா அமைப்புகளுக்கு யார் கொடுத்தது?

பன்முகத்தன்மை வாய்ந்த இந்திய தேசத்தில், அவரவர் விரும்பியதை அவரவர் தேர்ந்தெடுப்பதற்கு எந்தவிதத் தடையும் கிடையாது என்று இந்திய அரசியல் சாசன சட்டம் கூறுகின்றது. அப்படி இருக்கும்போது, இவர்கள் முஸ்லிமாக மாறக்கூடாது. இந்துக்களாக மாறக் கூடாது என்று சொல்வதற்கு இவர்கள் யார்? இன்னும் சொல்லப்போனால், பாரதிய ஜனதாவில் இருக்கும் சிக்கந்தர் பக்த், முக்தார் அப்பாஸ் நக்வி ஆகியோரது மனைவியர் இந்து மதத்தைச் சேர்ந்தவர்கள் ஆவர்.

இவர்களுக்குத் தகுந்த பதிலடி கொடுக்க, மதச்சார்பற்ற சக்திகள் ஒன்றிணைய வேண்டும். 'லவ் ஜிஹாத்' என்ற பெயரில் இவர்கள் நடத்தி வரும் அவதூறுக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும். இல்லையென்றால், இவர்கள் இதன் மூலம் நாட்டைச் சுரண்டுவதைத் தடுக்க முடியாமல் போய்விடும்.

கர்நாடகக் காவல்துறை, கேரளக் காவல்துறை தத்தமது மாநிலங்களில் 'லவ் ஜிஹாத்' இல்லை என்று அறிக்கை விட்டதோ, அதேபோன்று இந்தியாவில் உள்ள அனைத்து மாநிலங்களும் 'லவ் ஜிஹாத்' இல்லை என்று அறிக்கை வெளியிடும் வரை போராட்டத்தைத் தொடர்ந்து நடத்த வேண்டும். அப்போதுதான் இதற்கு முடிவு கட்ட முடியும்.

# கண்ணியக் கவசம் ஹிஜாப்



**க**ண்ணுக்கு இமை போல பெண்ணுக்கு ஹிஜாப். இமைகளை இறைவன் படைத்திருப்பது கண்களைச் சிறைப்படுத்தவோ சிதைக்கவோ அல்ல; கண்களின் பாதுகாப்புக்குத்தான்.

அதுபோல பெண்களுக்கு ஹிஜாபை இறைவன் கடமையாக்கியது அவளை அடிமைப்படுத்தவோ, சிறுமைப் படுத்தவோ அல்ல; அவளுடைய கண்ணியத்தைக் காப்பதற்குத்தான்.

ஆம்..! பெண்களுக்கு ஆன்மா இல்லை; பெண் தாழ்ந்தவள்; பெண் அடிமை என்ற காலகட்டத்தில் பெண் குழந்தை பிறப்பதை நற்செய்தியாகச் சொன்ன மார்க்கம் இஸ்லாம்.

பெண்களுக்கு கல்வி உரிமை, சொத்துரிமை, பொருளீட்டும் உரிமை, கணவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமை, மணக்கொடை நிர்ணயிக்கும் உரிமை, மண விலக்கு உரிமை, எழுத்துரிமை, பேச்சுரிமை, வேதம் கற்கும் உரிமை, கற்பிக்கும் உரிமை எனப் பெண்ணின் விடுதலை மார்க்கமாக வந்ததுதான் இஸ்லாம். இத்தனை உரிமைகள் இருந்தும் இஸ்லாம் பெண்களை அடக்கி ஒடுக்குவது போன்ற சித்திரம் வரையப்பட்டது ஏன்?

பெண்களுக்கும் சரி, ஆண்களுக்கும் சரி கட்டுப்பாடுள்ள சுதந்திரத்தைத்தான் இஸ்லாம் வகுத்துத் தந்துள்ளது. எப்படியும் மனம்போன போக்கில் வாழ்வதற்கு இஸ்லாம் அனுமதிப்பதில்லை. அதுபோல பெண்களின் உடை விசயத்தில் மார்க்கம் விதித்த கட்டுப்பாடுதான் பெண்ணடிமையாய் சித்திரிக்கப்படுகிறது.

### அடிமைத்தனத்தின் சின்னமா ஹிஜாப்?

பெண்களுக்கு இஸ்லாம் வழங்கிய மகத்தான அருட்கொடைதான் ஹிஜாப் எனும் உடையணியும் ஒழுங்கு முறை. ஹிஜாப் அணியச் சொல்வதன் அடிப்படையே பெண்கள் வெளியே செல்லலாம் என்பதுதான். பெண் சமூகத்தின் அங்கமாக சகலப் பணிகளிலும் பங்காற்ற வேண்டுமெனில் அவள் கண்ணியமாய் உடையணிந்து வரவேண்டும்.

ஹிஜாப் அணிவதனால் அவளது பணிகளில் பாதிப்பு எதுவுமில்லை. பெண்ணுரிமை என்ற போர்வையில் பெண்களை அரைகுறையாக்கி காட்சிப் பொருளாய், கடைச் சரக்காய் ஆண்வர்க்கம் அடிமைப்படுத்தி வைத்துள்ளது. கண்ணியம் இல்லாது ஏது பெண்ணியம்? உரிமை என்பது ஆடைக் குறைப்பு அல்ல; முழுமையாய் அணிவதுதான்!

### சிறகுகள் பறவைக்குப் பாரமாகுமா?

ஹிஜாப் பெண்களுக்கு சிரமமான ஒன்று எனச் சிலர் கருதுகின்றனர். ஹிஜாப் என்பது பெண்களுக்கு மட்டுமான உடையல்ல. ஆண்களுக்கும் ஹிஜாப் இருக்கிறது. ஆண்களும் பெண்களும் கண்ணியமாய் உடையணிவதையே இஸ்லாம் வலியுறுத்துகிறது.

''(நபியே!) இறைநம்பிக்கை கொண்ட ஆண்களிடம், அவர்கள் தங்கள் பார்வைகளைப் பேணிக் கொள்ளும்படியும் தங்களுடைய வெட்கத்தலங்களைப் பாதுகாத்துக் கொள்ளும்படியும் நீர் கூறும். இதுவே, அவர்களுக்கு மிகத் தூய்மையான வழிமுறையாகும். அவர்கள் செய்யும் அனைத்தையும் திண்ணமாக, அல்லாஹ் நன்கு தெரிந்தவனாக இருக்கின்றான். மேலும் (நபியே!) இறைநம்பிக்கை கொண்ட பெண்களிடம் கூறும்: அவர்கள் தங்களுடைய பார்வைகளைப் பேணிக் கொள்ளட்டும். தங்களுடைய வெட்கத் தலங்களைப் பாதுகாக்கட்டும்; தங்களுடைய அழகை வெளியில் காட்டாதிருக்கட்டும்; அதிலிருந்து தாமாக வெளியே தெரிகின்றவற்றைத் தவிர! மேலும், தங்களுடைய மார்புகள் மீது தங்கள் முன்றானையைப் போட்டுக் கொள்ளட்டும்.'' *(திருக்குர்ஆன் 24: 30,31)*

மறைக்க வேண்டிய பகுதிகளை மறைப்பதில் என்ன சிரமம் இருக்கிறது? பிறரைக் கவரும் வகையில் உடையணியாமல் கண்ணியமாய் அணிவதில் சிக்கல் என்ன இருக்கிறது?

### உடையில் மட்டும்தான் கண்ணியமா?

ஹிஜாப் என்பது உடையணிவதில் மட்டுமல்ல. நமது ஒவ்வொரு உறுப்பிற்கும் ஹிஜாப் இருக்கின்றது. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: ''தீய காட்சிகளைப் பார்ப்பது கண்கள் செய்யும் விபச்சாரம்'' அப்படியெனில் கண்களுக்கு ஹிஜாப் வேண்டுமல்லவா? பார்வையைத் தாழ்த்தச் சொல்கிறது இஸ்லாம். அதுதான் கண்களின் ஹிஜாப். காதுகளின் ஹிஜாப் என்பது தீயன கேளாமை. கைகளின் ஹிஜாப் என்பது தீயன தீண்டாமை. கால்களின் ஹிஜாப் என்பது தீமை நெருங்காமை. உள்ளத்தின் ஹிஜாப் என்பது தீது எண்ணாமை. இவ்வாறு நமது ஒவ்வொரு உறுப்பும் ஹிஜாப் அணிய வேண்டும். அப்போதுதான் கண்ணியமிக்க சமுதாயம் உருவாகும்.

### அணிவதினால் ஆன பயன் என்ன?

பூக்கள் பூத்துக் குலுங்கும் செடிகளுக்கு வேலியைப் போன்றதுதான் ஹிஜாப். நமது அழகை வெளிக் காட்டாமல் பாதுகாக்கும் வேலிதான் ஹிஜாப். பார்வைகளை அலையவிடும் வெள்ளாடுகளிடமிருந்து இந்த வேலி நம்மைப் பாதுகாக்கும். தொல்லையிலிருந்து நமக்கு பாதுகாப்பு வழங்குவதும் ஹிஜாப்தான்.

''நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சக்கூடியவர்களாயிருந்தால், மென்மையாகப் பேசாதீர்கள். ஏனெனில், உள்ளத்தில் கெட்ட எண்ணத்தைக் கொண்டிருக்கும் யாரேனும் ஒருவன் சபலம் கொள்ளக்கூடும்! ஆகவே, தெளிவாய் நேர்த்தியாய்ப் பேசுங்கள்.'' (திருக்குர்ஆன் 33:35)

உடை ஓர் அடையாளம். பெண்மையின் மாண்பையும், மகத்துவத்தையும் இந்த உடையினால் அளவிட முடிகிறது. ஹிஜாப் அணியும் பெண்கள் கண்ணியமாய் பார்க்கப்படுவதுடன் அவர்களிடம் நல்லமுறையில் மக்கள் நடந்து கொள்வதையும் நாம் பார்க்கின்றோம்.

ஹிஜாப் ஒரு கண்ணியக் கவசம். எதிர்வரும் அம்புகளிடமிருந்து கவசம் நம்மைக் காப்பதுபோல் ஆபாச அம்புகள் எவ்வடிவில் வந்தாலும் ஹிஜாப் நம்மைப் பாதுகாக்கிறது. இந்த கவச ஆயுதம் தரித்துப் புறப்பட்டால் எத்தகைய இடர் நிறைந்த பாதையிலும் பாதுகாப்பாகப் பயணம் செய்யலாம்.

இஸ்லாம் எனும் உயரிய மார்க்கத்தின் கௌரவ அடையாளம் ஹிஜாப். காக்கிச் சட்டைக்கென ஒரு மரியாதை, இராணுவ உடைக்கென்ற ஒரு கம்பீரம் இருப்பது போல் ஹிஜாபிற்கும் தனி அந்தஸ்து இருக்கின்றது. இவள் முஸ்லிம் சமுதாயத்தின் ஓர் அங்கம் எனும் அடையாளம். உயரிய இஸ்லாமிய சமுதாயத்தின் சகோதரி இவள் எனும் மரியாதை. ஒழுக்கம் நிறைந்த மார்க்கத்தின் மகள் இவளென்ற கண்ணியம்.

> ''மனிதன் ஆதிகாலத்தில் நிர்வாணமாக இருந்தான். அவனது அறிவு வளர வளர உடைகளை அணிய ஆரம்பித்தான். எனது இன்றைய நிலையும், எனது உடையும் மனிதன் அடைந்த உயர்ந்த நாகரிகத்தின் அடையாளமாகும். இது பிற்போக்குத்தனமல்ல. மீண்டும் உடைகளைக் களைவதுதான் பழங்காலத்தை நோக்கிச் செல்லும் பிற்போக்குத்தனமாகும்.''
>
> **– தவக்குல் கர்மான்**
>
> *அமைதிக்கான நோபல் பரிசு பெற்ற பெண்மணி*

ஹிஜாப் வெட்க உணர்வின் வெளிப்பாடு. வெட்கமற்ற உலகில் கூச்சமற்றுத் திரியும் மிருகங்களைப் போல் அல்லாமல் மனிதன் உடையணிந்து வலம் வருகின்றான். ஆடையணிந்தும் நிர்வாணமாய் இருக்கின்றான் என்றால் இவன் உடையணிந்த மிருகம்தான் இல்லையா? மனித குணத்தின் மகத்தான குணமான வெட்க உணர்வின் வெளிப்பாடாக ஹிஜாப் திகழ்கிறது.

### ஹிஜாப் எவ்வாறு அணிய வேண்டும்?

- ஒரு பெண் தனது முகம், இரு கைகள் (மணிக்கட்டு வரை) ஆகியவற்றைத் தவிர உடலின் ஏனைய பகுதிகள் முழுவதையும் மறைக்க வேண்டும்
- அணியும் ஆடை உடலின் வனப்பை வெளிக் காட்டும் மெல்லிய ஆடையாகவோ, உடல் தெரியும் வண்ணமோ இருக்கக்கூடாது.
- தங்களின் அழகு வெளியில் தெரியும் வண்ணம் இறுக்கமாக உடை அணியக்கூடாது, அலங்காரமானதாக இருக்கக்கூடாது.
- ஆண்களைப் போன்று ஆடை அணிதல் கூடாது

### கட்டாயம் அணிய வேண்டுமா?

ஹிஜாபை விரும்பினால் அணியலாம். விருப்பமில்லை என்றால் விட்டு விடலாம் எனும் பேச்சுக்கே இடமில்லை. இறைவன் விதித்த வரம்புகளை மீறுபவர்கள் அக்கிரமக்காரர்கள்.

ஹிஜாப் அணிவது இறைக்கட்டளை. ஏற்று நடந்தால் கூலி கிடைப்பதைப் போல ஏற்க மறுத்தால் தண்டனையும் அவசியம் கிடைக்கும். ஹிஜாப் அணிவதால் மேற்கூறிய நன்மைகள் யாவும் வந்துசேரும் என்பதற்காக மட்டும் அணியாமல், இதனை ஒரு ஃபேஷனாக அணியாமல், ஊரும் உறவும் என்ன சொல்லுமோ என்பதால் அணியாமல் இதனை இறைக்கட்டளை என உணர்ந்து அணிய வேண்டும்.

இஸ்லாமிய வரம்புகளைப் பேணக்கூடியவர்களாகவும், உள்ளும் புறமும் ஹிஜாபைப் பேணக்கூடியவர்களாகவும் நம்மை இறைவன் ஆக்கி அருள் புரிவானாக!

# பாலஸ்தீனத்தை ஆதரிக்கும் இலத்தீன் அமெரிக்க நாடுகள்

• அஷ்கர் தஸ்லீம்

பொதுவாக, முஸ்லிம்களிடம் நிலவும் அமெரிக்க எதிர்ப்பு உணர்வுக்கும் அப்பால், என்னை மேற்கின் அரசியலை வெறுக்க வைத்த முக்கியக் காரணிகளில் ஒன்று, அதன் கட்டுப்பாடற்ற சுரண்டல் முறைதான். பதினைந்தாம் நூற்றாண்டு தொடங்கி இருபதாம் நூற்றாண்டு வரை ஆசியாவிலும் ஆப்ரிக்காவிலும் ஐரோப்பா மேற்கொண்ட சுரண்டலுக்குப் பின்னர், ஆசிய ஆப்ரிக்க நாடுகளுக்கு விடுதலை வழங்கப் பட்டபோதும், அவை தொடர்ந்து மேற்கின் பொருளாதார அடிமைகளாக இருக்கும்படி பார்த்துக் கொள்ளப்பட்டன. அதற்கேற்றபடி உலகப் பொருளாதார முறைகள் உருவாக்கப் பட்டன.


சேகுவேரா

ஜான் பெர்கின்ஸ் எழுதிய Confessions of an Economic Hit Man என்ற நூலை வாசிக்கும் போது, இருபதாம் நூற்றாண்டில் அமெரிக்கா மேற்கொள்ளும் சுரண்டலை நன்கு புரிந்து கொள்ளலாம். ஐந்தாண்டுகளுக்கு முன்னர் எனது ஆசிரியர் ஒருவர் இந்தப் புத்தகத்தின் தமிழ் மொழிபெயர்ப்பை எனக்குப் பரிசளித் தார். என்னை அமெரிக்காவை வெறுக்க வைத்த முதல் தரப் புத்தகம் இதுவென்று சொல்லலாம்.


ஃபிடல் காஸ்ட்ரோ

அமெரிக்க வெறுப்பு உணர்வுடன், சோஷி யலிஸம் குறித்த தேடல்கள் தொடங்கின. ரஷ்யா, சீனா, கிழக்கு ஐரோப்பா, மத்திய ஆசியா என்று சோஷியலிஸ வாடை வீசிய திசைகளை உற்று நோக்கினேன். இலத்தீன் அமெரிக்கா விலும் சோஷியலிஸ வாடை வீசியதால் அந்தப் பக்கமும் கொஞ்சம் திரும்பிப் பார்த்தேன்.


ஹியூகோ சாவேஸ்

இலத்தீன் அமெரிக்கா மீதான ஆய்வு அதன் மீது ஒரு காதலையும் ஈர்ப்பையும் என்னுள் ஏற்படுத்தியது. சே குவேரா, ஃபிடல் காஸ்ட்ரோ, ஹியூகோ சாவேஸ், ஹோசே முஹிகா, ஈவோ மோரல்ஸ் என இலத்தீன் அமெரிக்கத் தலைவர்கள் பலரும் இதர அரசியல் தலைவர்களை விட வித்தியாசமானவர்களாகவே எனக்குத் தோன்றினர். அமெரிக்கா, அதன் கொள்கைகள், முதலாளித்துவம், ஏகாதிபத்தியம் ஆகியவற்றை இலத்தீன் அமெரிக்க நாடுகள் எதிர்த்து வந்தன. பன்னாட்டு விவகாரங்களில் அமெரிக்க முகாமுக்கு எதிர்நிலையை அவை எடுத்து வந்தன.

மத்திய கிழக்கின் நிம்மதியை இல்லாம லாக்கி, மனித வரலாற்றில் தோன்றிய ஒரு மாபெரும் நாகரிகத்தின் பிறப்பிடத்தை சின்னாபின்னமாக்கி வரும் இஸ்ரேலை, பிரிட்டனும் அமெரிக்காவுமே உருவாக்கி கவ னித்து வருகின்றன. இஸ்ரேல், பாலஸ்தீனில் மேற்கொள்ளும் அனைத்து நாசகார நட வடிக்கைகளையும் அமெரிக்கா கண்மூடித் தனமாக அங்கீகரித்தே வந்துள்ளது. இத்த னைக்கும் மொழியாலும் மதத்தாலும் பாலஸ் தீனர்களின் சகாக்களான அரபு ஆட்சியாளர்கள் அமெரிக்க எஜமானனுக்குக் கட்டுப்பட்டு, பாலஸ்தீனர்களுக்கு ஆதரவு வழங்காது மௌனமாக இருக்கின்றனர்.

ஆனால், மொழியாலோ மதத்தாலோ தம் மைச் சார்ந்திராத பாலஸ்தீனர்களுக்கு இலத் தீன் அமெரிக்க ஆட்சியாளர்களும் மக்களும் தொடர்ந்து ஆதரவுக் குரல் கொடுத்து வருகின் றனர். இஸ்ரேலிய பயங்கரவாதத்தைத் துணி வுடன் எதிர்க்கும் இலத்தீன் அமெரிக்கத் தலைவர்களையும் மக்களையும் பார்க்கும் போது, ஒரே மொழியையும் ஒரே மதத்தை யும் பகிர்ந்து கொண்டு, பாலஸ்தீனுக்கு ஆத ரவு வழங்காத அரபு ஆட்சியாளர்களைக் கடிந்து கொள்வதற்கு எனக்கு வார்த்தைகள் வரவில்லை.

அல்ஜஸீரா செய்தியாளர் தீமா கதீப் எழுதிய Palestine present more than ever in Latin American politics என்ற கட்டுரை இலத் தீன் அமெரிக்கத் தலைவர்களும் மக்களும் நிறுவனங்களும் பாலஸ்தீன விவகாரம் குறித்து கொண்டுள்ள அக்கறையை அழகாக விளக்கியிருந்தது.

மத்தியகால ஐரோப்பிய அரசியலில் நாடுபிடிக்கும் வெறி பரவியிருந்தது. இந்த வெறியின் உந்துதலே கொலம்பஸை வழிதவறியேனும் அமெரிக்கா கொண்டு

போய் சேர்த்தது. கொலம்பஸின் வருகைதான் அமெரிக்கக் கண்டத்தை உலகின் ஏனைய பாகங்களுடன் இணைத்து வைத்ததாகப் போற்றப்படுகின்றது. ஆனால், உண்மையில் அமெரிக்காவில் வாழ்ந்து வந்த பூர்வீகக் குடிகளின் இன அழிப்பு கொலம்பஸின் வருகையுடனேயே தொடங்குகின்றது. கொலம்பஸ் நவீன அமெரிக்காவைக் கண்டு பிடித்தான் என்பதைவிட, அமெரிக்கக் கண்டத்தில் வசித்து வந்த பூர்வீக மக்களை இனஅழிப்புச் செய்தான் என்றுதான் சொல்ல வேண்டும்.


ஹோசே முஹீகா


ஈவோ மோரல்ஸ்

கால ஓட்டத்தில் இலத்தீன் அமெரிக்காவில் சுதந்திரம் பெற்ற முதல் நாடு ஹெய்ட்டி. அதற்கு 1804 இல் விடுதலை வழங்கப்பட்டது. அதன் பின்னர், இலத்தீன் அமெரிக்காவின் ஏனைய நாடுகள் விடுதலை பெறத் தொடங்கின. கியூபாவில் புரட்சியை வழிநடத்திய ஃபிடல் கஸ்ட்ரோ 1959 இல் இலத்தீன் அமெரிக்காவின் முதல் கம்யூனிஸ நாடாகக் கியூபாவைப் பிரகடனப்படுத்தினார். அத்தோடு, கியூபா மீது அமெரிக்கா பொருளாதாரத் தடை விதித்தது.

2000ஆம் ஆண்டுக்குப் பிந்தைய இலத்தீன் அமெரிக்காவில் சோஷியலிஸ - இடதுசாரிகளின் செல்வாக்கு அதிகரித்துள்ளது. வெனிஸுலாவின் ஹியூகோ சாவேஸ், சிலியின் ரிகாடோ லாகோஸ், மிசெல் பெசலெட், பிரேசிலின் லுலா டி சில்வா, டில்மா ரஸெவ், அர்ஜென்டினாவில் நெஸ்டர் கிரிச்னர், அவரது மனைவி கிரிஸ்டினா பெர்னான்டஸ், உருகுவேயில் தபரே வஸ்குஸ், ஹோசே முஹீகா, பொலிவியாவில் ஈவோ மோரல்ஸ், நிகரகுவாவில் டேனியல் ஒர்டெகா, ஈகுவடாரில் ரபாஎல் கொர்ரெ, பெருகுவேயில் பெர்னான்டோ லுகோ, ஹொன்டுரஸில் மெனுல் ஸெலாயா என்று இவர்கள் அனைவரும் இடதுசாரிச் சிந்தனைகளைப் பிரதிநிதித்துவம் செய்கின்றனர்.

இலத்தீன் அமெரிக்காவின் அண்மைய முக்கிய செய்தி பொலிவியாவின் ஜனாதிபதியாக ஈவோ மோரல்ஸ் மீண்டும் தேர்வு செய்யப்பட்டுள்ள நிகழ்வாகும். ஈவோ மோரல்ஸ் பொலிவியாவின் பூர்வீக இனத்தைச் சேர்ந்தவர்; முதலாளித்துவ எதிர்ப்பாளர். 2005 இல் முதல் தடவையாக இவர் ஜனாதிபதியாகத் தேர்வு செய்யப்பட்டார். பொலிவிய வரலாற்றில் பொலிவியாவின் பூர்வீக இனத்தவர் ஒருவர் ஜனாதிபதியாக வந்த முதல் சந்தர்ப்பம் இதுதான்.

மோரல்ஸ் ஆட்சிக்கு வந்தது முதல் இலத்தீன் அமெரிக்காவிலுள்ள ஏனைய இடதுசாரித் தலைவர்களுடன் நெருக்கமான உறவை வளர்த்துக் கொண்டார். குறிப்பாக வெனிஸுலாவின் ஹியூகோ சாவேஸ், கியூபாவின் பிடல் காஸ்ட்ரோ. ஆனால், அமெரிக்காவுடனான உறவில் விரிசல்தான். இது எதிர்பார்த்த ஒன்றுதான். தனது அரசாங்கத்துக்கு எதிராக சதி செய்தார் என்று குற்றம் சாட்டி, அப்போதைய அமெரிக்கத் தூதுவர் பிலிப் கோல்பெர்க்கை வெளியேற்றினார் மோரல்ஸ். இது 2008 இல் நடந்தது. தான் மூன்றாவது தடவையாகவும் ஜனாதிபதியாகத் தேர்வு செய்யப்பட்டதன் பின்னர் அல்ஜஸீரா வுக்கு வழங்கியுள்ள நேர்காணலில் ஈவோ மோரல்ஸ் பல விஷயங்களைப் பகிர்ந்து கொண்டுள்ளார்.

ஈவோ மோரல்ஸ் சொல்வதைக் கேளுங்கள்:

''இன்று முதல் நாம் பொலிவியாவை ஒரு பெரிய நாடாகவே பார்க்க வேண்டும். நாம் முன்னேற்றமடைகிறோம். 180 ஆண்டுகளாக ஏனையோரால் செய்ய முடியாத விஷயங்களை நாம் 9 ஆண்டுகளில் செய்துள்ளோம். ஒரு நாடு அதன் சக்தி வளத்தை நிர்வகிக்க வேண்டும். அயல் நாடுகளுடன் தம்மிட முள்ளவற்றைப் பகிர்ந்து கொள்ள வேண்டும். நாம் தென் அமெரிக்காவின் சக்தி வள கேந்திர நிலையமாக மாற விரும்புகிறோம்.''

நேர்காணலை நடத்திய செய்தியாளர் , உங்களின் வெற்றி பிடல் காஸ்ட்ரோவுக்கும் சாவேஸுக்கும் சமர்ப்பணம் செய்யப்பட்டது. நீங்கள் எந்த வகையான சோஷியலிஸத்தை நம்புகிறீர்கள்? கியூபாவா வெனிஸுலாவா? என்று கேட்கிறார். அதற்குப் பதிலளிக்கும் மோரல்ஸ், ''நான் எனது வெற்றியை பிடல் காஸ்ட்ரோவுக்கும் சாவேஸுக்கும் மாத்திரம் சமர்ப்பணம் செய்யவில்லை. ஏகாதிபத்தியத்திற்கு எதிரான இலத்தீன் அமெரிக்க மக்களுக்கும் உலக மக்களுக்கும்கூட நான் அதனைச் சமர்ப்பணம் செய்தேன்.'' என்கிறார்.

''இப்போது சோஷியலிஸம் குறித்த விஷயத்துக்கு வருவோம். ஒவ்வொரு நாடும் தமக்கே உரிய தனித்துவத்தைக் கொண்டிருக்கின்றன. கியூபா செய்தவற்றை நான் செய்வேனா? அவை நிச்சயமாக பொலிவியாவில் சாத்தியப்படாது. உருகுவே, ஈகுவடோர், வெனிஸுலா ஆகிய நாடுகள் செய்தவற்றை நான் செய்வேனா? நிச்சயமாக சாத்தியமில்லை. ஏனெனில் நாம் வித்தியாசங்களைக் கொண்டிருக்கின்றோம். எமக்கு முன்னுரிமை கொடுக்க வேண்டிய விஷயங்கள் உள்ளன. அவற்றை நாம் மேற்கொள்வோம்.''

இலத்தீன் அமெரிக்காவின் இடதுசாரிகள் உள்ளூரை வளர்ச்சியடையச் செய்வது போன்று பன்னாட்டுத் தளத்திலும் சமநிலையை உருவாக்கும் நிலைக்கு வர வேண்டும் என்பதே நியாயமான சிந்தனையுடையோரின் எதிர்பார்ப்பாக இருக்க முடியும். இலத்தீன் அமெரிக்க இடதுசாரிகள் அதை நிறைவேற்றுவார்களா என்பதைப் பொருத்திருந்து பார்ப்போம்.

(கட்டுரையாளர், இலங்கையிலிருந்து வெளிவரும் மீள்பார்வை இதழின் ஆசிரியர் ஆவார்.)

# ஹிஜாபின் நோக்கம்

• ஐ.சாந்த் உஸ்மானி



பெண்களுக்கு அழகு சேர்ப்பது அணிகலன்களை விட ஆடைகளே. முறையான ஆடையுடன் பெண்களை காணும் போது இஸ்லாத்தின் கண்ணியத்தை உணர முடியும் என்பதில் இருவேறு கருத்திற்கு இடமில்லை. கண்களுக்கு இமை ஒரு சுமை அல்ல; பாதுகாப்பு. பயிருக்கு வேலி ஒரு பாதுகாப்பு. அதுபோல்தான் பெண்ணிற்கு ஹிஜாப் ஒரு பாதுகாப்பு அடையாளம் மட்டுமல்ல இறைக்கட்டளை. இந்த இறைக்கட்டளையுடன் பயணிக்கும்போது நம் பயணம் நிச்சயம் பாதுகாப்பாகத்தான் இருக்கும்.

முகநூலில் ஹிஜாப் தினம் என செய்தி வெளியான போது சிலர் கேலியாகப் பேசினர். அப்படியில்லை. நன்மையை நாடி ஒரு காரியம் செய்யும் போது அதன் பலன் நிச்சயம் உண்டு. ஒரு தினம் அனுசரிக்கும் போது நாம் ஆர்ப்பாட்டம் ஆரவாரம் செய்பவர்கள் அல்லர். ஹிஜாப்பின் முக்கியத்துவத்தை உணர்த்த, நினைவு படுத்த மக்கள் மனங்களில் மாற்றங்கள் ஏற்பட இந்த ஹிஜாப் தினம் வழிவகுக்கும். பல வருடங்கள் சொல்லி, சொல்லி வயதான காலத்தில் பர்தாவைப் பேணும் பாக்கியம் பெற்றவர்களும் உண்டு.

கலாச்சார சீரழிவு எதையும் விட்டுவைக்கவில்லை என்றே சொல்லலாம். அதில் முதல் இடத்தில் இருப்பது ஆடைகளே. இந்தச் சீரழிவிற்கு பெண்களே துணை போவதுதான் வேதனையான விஷயம். வரைமுறை இல்லாத எதுவும் வாழ்வை பாதிக்கும். ஆடை உடுத்திக் கொண்டிருக்கிறேன் என்ற பெயரில் அலங்காரமாகவே அலைந்துகொண்டிருக்கிறார்கள். பர்தா உடலை மறைத்து பாதுகாக்கத்தான் உடுத்த வேண்டும். நாமே பலரும் திரும்பி பார்க்கும் படியோ, பலமுறை பார்க்க வைக்கும் படியோ உடுத்துகின்றோம். பலருடைய பண்பாடற்ற பார்வைகளுக்கு திரையாக நாம் அதை பயன்படுத்த வேண்டும். ஜன்னல், பின்னல் ஜாக்கெட் போல் பர்தாவிலும் கைக்கு ஒரு கலர், உள்ளே அணிந்து இருக்கும் வண்ண வண்ண ஆடை தெரியும் அளவிற்கு பகுதி பிரிவு, நெட் துணி கைக்கு மட்டும் இப்படி இஷ்டத்துக்குப் பயன்படுத்துவது ஆரோக்கியம் அல்ல.

தொழுகை, நோன்பு, ஹஜ் இப்படி மற்ற கட்டளைக்கு எவ்வாறு பணிந்து செயல்படுகிறோமோ அது போல்தான் ஹிஜாபிற்கும் நாம் பணிந்து செயல்பட வேண்டும். தங்கள் துப்பட்டாக்களை தங்கள் மேலாடைகளின் மீது போட்டு மறைத்துக் கொள்ள வேண்டும் என (24 : 31) அல்லாஹ் தன் திருமறையில் கூறுகின்றான். மேலும் அறியாமைக் காலத்து மக்களைப் போல் தங்களை அலங்கரித்துக் கொண்டு வெளியில் சென்று திரிந்து கொண்டிருப்பதைப் போல நீங்களும் திரியாதீர்கள் (33 : 33) என்கிறான். இன்று நாம் அறியாமை காலத்து பெண்களைப் போல அறிந்து கொண்டே செல்கிறோம்.

புகழுக்காகவும், பகட்டுக்காகவும் ஆடைகளை நாம் அணியக் கூடாது. புகழுக்காகவும், பகட்டுக்காகவும் யார் ஆடை அணிகின்றார்களோ அவர்களுக்கு அல்லாஹ் மறுமை நாளில் இழிவின் ஆடையை அணிவிப்பான். பின்னர் அவர்கள் நரக நெருப்பில் வீசப்படுவர்'' என்பது நபிமொழி.

இறைக்கட்டளை என்று தெரிந்தே நாம் செயல்படுத்துவதில்லை; செயல்படுத்துபவர்களும் பேணுதல் இல்லாமல் இருக்கின்றார்கள். சகாபியப் பெண்மணிகள் எந்த அளவு செயல்பட்டார்கள் என்று ஆயிஷா (ரலி) அறிவிக்கின்றார்கள். இந்த வசனங்கள் அருளப்பட்டவுடனே ஆண்கள் அனைவரும் தம் வீடுகளுக்கு சென்று இவ்வசனங்களைச் சொன்னார்கள்; அதைக் கேட்டதும் அன்சாரிப் பெண்கள் அனைவரும் தாங்கள் அணிந்திருந்த துணியின் ஒரு பகுதியை கிழித்து தங்களின் துப்பட்டாக்களாக ஆக்கிக் கொண்டார்கள். இன்னும் பலர் போர்வைகளைக் கொண்டும், திரைச் சீலைகளை கொண்டும் துப்பட்டாக்களாக்கி கொண்டார்கள். அதே சமயம் மெல்லிய துணிகளை தவிர்த்து கனத்த துணிகளையே பயன்படுத்தினார்கள் என்று சொல்லியுள்ளார்கள்.

இஸ்லாமிய சகோதரிகளே படித்து விட்டு நாம் சும்மா இருந்து விடுகிறோம். இதுவல்ல இறைநம் பிக்கை. இதனை முழுமையாக, இயன்றவரை கடைப்பிடிப்பதும் பிறருக்கு எடுத்துச் சொல்வதும்தான் நமது கடமை.

பலர் பார்வை படும்படி மெல்லிய துணியால் பகுதி, பகுதியாக நம் உடலை காண்பித்து போகிற, வருகிற வர்களை பாருங்கள் என்று நாமே பிரகடனப்படுத்துவது போல் ஆகாதா? ஹிஜாப் அணிவதால் அதன் உண்மை யான நோக்கம் நிறைவேற வேண்டும். அவ் வாறில்லாமல் பெண்ணின் உடலமைப்பு வெளியே தெரியுமளவிற்கு மெல்லிய துணி கொண்டு அணிய கூடாது என்று நபி (ஸல்) கூறியுள்ளார்கள். இன்ஷா அல்லாஹ் நபிமொழிக்கேற்ப நாம் பர்தா அணிய முயல வேண்டும்.

மேலும் நபி (ஸல்), அபூபக்கர் (ரலி) அவர்களுக்கு பிறகு உமர் (ரலி) ஒரே இடத்தில் அடக்கம் செய்த பிறகு அந்த அறைக்குள் நான் போர்த்திக் கொள்ளாமல் செல் வதில்லை என்று கூறிய ஆயிஷா (ரலி) பண்பு எங்கே? நாம் எங்கே?

வலிப்பு நோயின் காரணமாக உணர்வில்லாத போது என் துணி கரண்டை காலுக்கு மேல் உயர்ந்து விடுகிறது. அதற்காக துஆ செய்யுங்கள் என்று கூறிய உம்மு ஸுஃபைர் (ரலி) எங்கே? நாம் எங்கே? இந்த இருவரின் கூச்ச உணர்விற்கு முன் நாம் எங்கே நிற்கிறோம்?

ஹிஜாப் போட்டுக் கொண்டிருப்பவர்களில் பலர் வெளியே செல்ல மட்டும் பர்தா என்ற நிலையில் உள் ளார்கள். தெருவில் காய்கறி வாங்கும் போது, பக்கத்து கடைக்கு செல்லும் போது, லாரி தண்ணீர் பிடிக்கும் போது என்று பல நிலையில் பர்தா இல்லாத உடுத்திய உடையோடு செயல்படுவதும வேதனையான விஷயம். போதிய மார்க்க அறிவு இல்லாமையைக் காட்டுகிறது. குடும்பத்தில் மாமா, மச்சான், கொழுந்தன், அடுத்த வீட்டு அண்ணன், தம்பி என்று பலர் முன்னிலையிலும் பர்தா இல்லாமல் சகஜமாக பழகுவதை தவிர்க்க வேண்டும்.

ஆண்களும், பெண்களும் சமம் என்று கூறுவது உண்மைக்கு எதிரானது. சமத்துவம், சகோதரத்துவம் என்றெல்லாம் பேசுவதோடு நின்று விடுவது ஒழுக்கமற்ற சமுதாயத்தை உருவாக்குவதும் ஊர்ஜிதப்படுத்தும் விதமாக நடந்து கொள்வதும் ஆரோக்கிய வாழ்விற்கு அழகல்ல. இஸ்லாத்துக்கு வரக்கூடியவர்கள், குறிப்பாக பெண்கள் குர்ஆனின் தாக்கம், குறிப்பாக ஹிஜாப் என்னைக் கண்ணியப்படுத்தும் கவசமாக உணர்த்திய தாகவே கூறுகிறார்கள்.

இஸ்லாத்தில் பிறந்த நாம் ஏன் அதன் சட்டத்திட் டங்களை முழுமைப்படுத்தக் கூடாது. இஸ்லாமிய சகோதரிகளே படித்துக் கொண்டே இருக்க வேண்டும்; அப்போது தான் நமக்குள் தெளிவு பிறக்கும். உள்ளம் நம்மை உசுப்பி விடும். நாம் எங்கே இருக்கிறோம்? என்ன செய்து கொண்டிருக்கிறோம் என்று.

ரயிலில் பயணம் செய்யும் போது மாற்றுமத சகோ தரி ஒருவர் உடை பற்றி பேச்சு வரும் போது நீங்கள்தான் உண்மையானவர்கள்; என்ன வெயில், என்ன மழை இருந்தாலும் இதை மாற்றிக் கொள்வதில்லை என்றும் அரசு இது போன்று உடை கட்டுப்பாடு கொண்டு வர வேண்டும் என்றார்.

என்ன அண்ணி, பட்டு உடுத்தி விட்டு பர்தா போட்டு விட்டீர்கள். இது கல்யாண மண்டபத்தில் கேட்ட டய லாக். நம் அலுவலக பணிக்கு செல்லும் நம் இஸ்லாமிய பெண், என் ஆபிஸில் நான் மட்டும்தான் முஸ்லிம்; பர்தா போட்டால் தனியாகத் தெரிவேன் என்றார்.

ஒரு கல்லூரி மாணவன் (இஸ்லாமிய மாணவன்) நாள் முழுவதும் பர்தாவுடன் ஆபிஸில் இருப்பது சாத் தியமா என்றார்.

பட்டு உடுத்தினால் பர்தா வேண்டாம் என்றோ, அலு வலகத்திற்கு ஹிஜாப் தேவையில்லை என்றோ இஸ்லாம் வரையறுக்கவில்லை; இறைக்கட்டளையை நாம் இயன்றவரை பேண வேண்டும். ''அல்லாஹ் தன் திரு மறையில் நீங்கள் முழுவதுமாக இஸ்லாத்துக்குள் நுழைந்து விடுங்கள்'' என்றுதான் கூறுகின்றான். மேலும் அழகையும், கவர்ச்சியையும் வெளிக்காட்டக் கூடாது என்பது நபிமொழி (அஹ்மத்) அழகை வெளிக்காட்டு வது பெரும் பாவங்களில் ஒன்று என்றும் நபி (ஸல்) குறிப்பிட்டுள்ளார்கள்.

மேலும் பெருமைக்காகவும், பகட்டுக்காகவும் ஆடை மட்டுமின்றி கலர் கலரான கவர்ச்சி பர்தாக்களை யும் அணிகிற நிலைதான் அதிகம் உள்ளது. சொல்ல வேண்டியது நம் கடமை என்ற ரீதியில் கண்ணில் படுபவர்களை ஹிஜாப் போடும் படி அழகிய முறையில் சொல்லலாம். தலையில் துணி போட்டு கொள்ளுங்கள். முடியை ஹிஜாப் உள் போட்டுக் கொள்ளுங்கள். தளர்வாக போடுங்கள் என்று எடுத்துச் சொல்லலாம். பைக்கில் செல்பவர்களுக்கு சைகையில், கண் ஜாடையில், தலையை மூடி செல்லுங்கள், அழகாக அம்சமாக இருப் பீர்கள் என்று உணர்த்துங்கள். முகம் தெரியாத யாரோ நமக்கு சொல்கிறார்களே என்று அவர்கள் சிந்திக்கக் கூடும்.

பிறருடைய பார்வையிலிருந்து தப்பிக்கத்தான் பர்தாவே தவிர பலரை பார்க்க வைக்க அல்ல என்பதை உணர்ந்து நாம் அணிய வேண்டும். ''கண்ணின் விபச் சாரம் என்பது தவறான பார்வை ஆகும்'' (புகாரி) நபி மொழி. பிறரை இந்த பாவமான காரியத்தை செய்ய நாம் இடம் கொடுக்கக் கூடாது என்ற உணர்வோடு நாம் உடுத்த வேண்டும். கேட்கும் விஷயம், பார்க்கும் விஷ யம்; செயல்படக் கூடிய விஷயங்களில் யாவும் நாம் ஹிஜாப் பேண வேண்டும். அல்லாஹ் கண்காணித்துக் கொண்டிருக்கிறான் என்ற நினைவோடு யாவும் செய்ய வேண்டும். இறைவனின் கட்டளை, கட்டாய கடமை, கண்ணியக் கவசம் என்றெண்ணி செயல்பட வேண்டும். ஷைத்தானிய உணர்வுகளுக்கு நாம் உடன்படாமல் இருக்க ஹிஜாப் பேண வேண்டும். மறுமையில் அல்லாஹ்வின் முன் தூய மனிதர்களாக நிற்க, நாம் யாவரும் இறைஉவப்போடு எதையும் செய்யக் கூடியவர்களாக இருக்க வல்ல ரஹ்மான் நமக்கு அருள் புரிவானாக!

# “விஞ்ஞானத்துடன் ஒத்துப்போகாத மதம் எனக்குத் தேவை இல்லை!”

## – மிஸ்.ஹெலினா

நான் கிறிஸ்தவக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவள் என்றபோதிலும், உண்மையில் எனது குடும்பம் மதப்பற்று இல்லாத குடும்பமாகத்தான் இருந்தது. எனது குடும்பத்தில் கடவுளின் பெயர் உச்சரிக்கப் படுவதை நான் ஒருபோதும் கேட்டதே இல்லை. யாரே னும் ஒருவர் கடவுளிடம் பிரார்த்திப்பதை நான் கண் டதே இல்லை. உங்கள் நன்மைக்குத்தான் இவற்றை யெல்லாம் செய்கின்றீர்கள் என்பதாகத்தான் நான் இளம்வயதில் அறிந்து வைத்திருந்தேன்.

நாங்கள் கிறிஸ்துமஸ், ஈஸ்டர், கோடையின் நடுப் பகுதி நாள்கள் (Midsummer) உள்ளிட்ட பண்டிகைகளை யும், அனைத்துப் புனிதர்களின் நாளையும் கொண்டாடி னோம். ஆனால், எதற்காக இதனைக் கொண்டாடு கிறோம் என்பது தெரியாது. அதைக் குறித்து கேள்வி கேட்டதும் இல்லை. இவையெல்லாம் ஸ்வீடன் பண் பாட்டின் ஒரு பகுதியாக இருந்தன.

ஒரு (புரோடஸ்டன்ட்) கிறிஸ்தவராக நீங்கள் இருந் தால், உங்கள் பதினைந்தாவது வயதில் ‘நம்பிக்கையை உறுதிப்படுத்திக் கொள்ளுதல்’ (Confirmation) என்ற ஒரு நிகழ்வை நீங்கள் கடந்தாக வேண்டும். அதில், கிறிஸ்த வத்தைச் சிறந்த முறையில் கற்றுக் கொள்வதற்காக சிறப்பு வகுப்புகள் நடத்தப்படும். அதன் பிறகு உங்கள் நம்பிக்கையை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். கிறிஸ்தவ மதத்தைக் கற்றுக் கொள்வதற்காக இந்த வகுப்பில் சேர நான் விரும்பினேன். எனவே மூன்று வாரங்கள் நடைபெறும் முகாமில் கலந்து கொள்ளும் விண்ணப்பத்தில் நான் கையெழுத்திட்டேன்.

இந்த முகாமில் காலை நேரங்களில் ஆன்மிக வகுப்புகளும் மாலை நேரங்களில் கோல்ஃப் விளையாட் டும் நடைபெறும். முதுமை காரணமாக நினைவாற்றல் குன்றிய பாதிரியார் ஒருவர் எங்களுக்கு வகுப்பெடுத்தார். மாலையில் விளையாடக்கூடிய கோல்ஃப் விளை யாட்டு குறித்துத்தான் எங்கள் எண்ணங்கள் அலை பாய்ந்து கொண்டிருந்தன. அந்த வகுப்பிலிருந்து நான் எதையும் கற்றுக்கொள்ளவில்லை.

உயர்நிலைப் பள்ளிக்கு நான் உல்லாசமாகச் சென்று பயின்று கொண்டிருந்தேன். எதுவும் எனக்குத் தீங் கிழைக்காது என்று நான் உணர்ந்தேன். எனது திறமை யின் படிநிலை, இயன்றதைச் செய்யும் தகுதியுடை யதாக இருந்தது. எனது தன்னம்பிக்கை மிக உயர்ந்து காணப்பட்டது.

எனது சிந்தனையில் மதம் ஒருபோதும் வந்ததே இல்லை. நான் அனைத்தையும் நல்ல முறையில் செய்தேன். எனக்குத் தெரிந்த ‘மதப் பற்றுடையவர்கள்’ ஒவ்வொருவரும் தளர்ச்சி அடைந்தாலோ அல்லது நோயுற்றாலோ ‘‘ஒரு வெளிச்சத்தை’’ கண்டனர். அவர்கள் உயிருடன் வாழ, அவர்களின் வாழ்வில் ஜீஸஸ் தேவைப் பட்டதாக அவர்கள் கூறினர். என்னுடைய மனத்தில் நான் என்ன நினைக்கின்றேனோ என்னால் அதனைச் செய்ய முடியும் என்பதை நான் உணர்ந்திருந்தேன். மதம் என்பது யதார்த்தத்திலிருந்து மறைந்து வாழ ஒரு சாக்குப்போக்கு மட்டுமே.

எனது கல்லூரி வாழ்க்கையில், வாழ்க்கையின் பொருள் என்ன என்பதைக் குறித்துச் சிந்திக்கத் தொடங் கினேன். எந்த மதத்தையும் ஏற்றுக் கொள்வதற்கு எனக்குக் கடினமான நேரமாக அது இருந்தது. ஏனென் றால், எல்லாப் போர்களும் பிரச்னைகளும் மதத்துடன் தொடர்பு கொண்டவையே. எனவே எனக்கு நானே ஒரு தத்துவத்தை வகுத்துக் கொண்டேன். ஒரு வகையான சக்தி அனைத்தையும் படைத்துள்ளது என்ற முடிவுக்கு நான் வந்தேன். ஆனால் அது கடவுள்தான் என நான் கூறமாட்டேன். என்னைப் பொறுத்தவரையில் கடவுள் என்பவர், நீளமான வெள்ளை தாடி வைத்திருக்கக்கூடிய கிறிஸ்தவ முதியவர் என்ற பிம்பம்தான் உள்ளது. அந்த முதியவர் இப்பிரபஞ்சத்தைப் படைத்திருக்க முடியாது என்பதையும் நான் அறிவேன்.

இறப்புக்குப் பின் வாழ்வு உள்ளது என்பதில் நான் நம்பிக்கை கொண்டிருந்தேன். மேலும், எல்லாமே ஏதோ ஒரு காரணத்துக்காகவே நடைபெறுகின்றன என நம்பினேன். எனது பின்னணி, பள்ளிப்படிப்பு காரணமாக டார்வின் கொள்கையை நம்பும்படி முட்டாள் ஆக்கப்பட்டேன். டார்வின் கொள்கை இன்று வரை உண்மை என்றே கற்பிக்கப்படுகிறது. நான் வாழ்வின் பொருள் குறித்து மேலும் மேலும் சிந்திக்கத் தொடங்கியபோது, மேலும் மேலும் நான் தளர்வுற்றேன். இந்த வாழ்க்கை சிறைச்சாலை போன்றது என உணர்ந்தேன். வாழ்வின் மீதான நாட் டத்தை நான் பெரும்பாலும் இழந்துவிட்டேன்.

புத்த மதம், இந்து மதம் குறித்து எனக்கு ஓரளவுக்குத் தெரியும். நான் பள்ளிக்கூடத்தில் படிக்கும்போதே இதன் மீது விருப்பம்

கொண்டிருந்தேன். அவர்களின் சிந்தனை முறையையும் வழிபாட்டு முறையையும் நான் நன்றாகவே அறிந்திருந் தேன். ஆனால், இஸ்லாம் குறித்து எனக்கு எதுவும் தெரியாது. எனது உயர்நிலைப் பள்ளிக்கூடத்தின் பாடப் புத்தகத்தில் மதம் தொடர்பான பாடத்தில், முஸ்லிம் களின் தொழுகை முறை பற்றிய பாடம் இருந்தது என் நினைவுக்கு வருகிறது. அது கார்ட்டூன் வரைபடம் போல இருந்தது. ஆனால், அதன் நம்பிக்கை குறித்து எதையும் நான் கற்கவில்லை.

ஊடகங்கள் வழியாகக் கட்டவிழ்த்துவிடப்பட்ட அனைத்து விதமான பரப்புரைகளையும் உண்மை என நம்பி நான் நொந்துபோய்விட்டேன். எல்லா முஸ்லிம் ஆண்களும் தம் மனைவியைக் கொடுமைப்படுத்து வார்கள்; அவர்களின் குழந்தைகளை அடிப்பார்கள்; அவர்கள் அனைவருமே வன்முறையாளர்கள்; கொலை செய்வதற்கும் தயங்கமாட்டார்கள் என்பதாக எனக்குச் சொல்லப்பட்டிருந்தது. அந்தக் கருத்துகள் என்னுள் திணிக்கப்பட்டிருந்தன.

எனது கல்லூரி வாழ்வின் இறுதியாண்டில், விஞ் ஞானத்தின் மீது அளவுகடந்த காதல் ஏற்பட்டது. விஞ் ஞானத்தின் செயல்முறைகளோடு நான் மோதத் தயாரா னேன். எனது ஆங்கிலத்தை மெருகேற்றிக் கொள்ள பன் னாட்டுப் படிப்பு அல்லது குறைந்தபட்சம் பன்னாட்டு அனுபவம் தேவையாக இருந்தது. என்னுடன் வேலை தேடிக்கொண்டிருந்தவர்கள் மூலம் சாதகமான நிலையை அடைந்தேன். அந்த வேலை தேடும் படலம் பாஸ்டனில் நிறைவடைந்தது. முஸ்லிம்கள் நால்வரை எனக்குப் பெற்றுத் தந்தது.

அந்தத் தருணத்தில் முஹம்மத் என்பவர் யாரெனத் தெரியாது. அல்லாஹ்தான் 'கடவுள்' எனக் குறிப்பிடப் படுகின்ற அந்தக் கடவுள் என்பதுகூட எனக்குத் தெரி யாது. நான் கேள்வி கேட்கத் தொடங்கினேன். புத்தகங் களை வாசித்தேன். ஆனால், மிக முக்கியமாக நான் முஸ் லிம்களுடன் இரண்டறக் கலந்து பழகத் தொடங்கினேன். இதற்கு முன் வேறொரு நாட்டைச் சேர்ந்த எந்த நண்பரும் எனக்குக் கிடையாது. எனக்குத் தெரிந்த அனைவரும் ஸ்வீடன் நாட்டைச் சேர்ந்தவர்கள். நான் சந்தித்த முஸ்லிம்கள் அனைவரும் மிகச்சிறந்த மனிதர்கள் ஆவர்.

என்னை அவர்கள் நல்ல முறையில் ஏற்றுக்கொண்ட னர். அவர்கள் என் மீது எதையும் கட்டாயப்படுத்தித் திணிக்கவில்லை. என் குடும்பத்தினர்களைவிட அவர்கள் என்னிடம் தாராள மனப்பாங்குடன் நடந்துகொண்டனர். இஸ்லாம் ஒரு சிறந்த வாழ்வியல் முறையாக எனக்குத் தோன்றியது. அது வழங்கும் கட்டமைப்பையும் உறுதியையும் நான் ஒப்புக்கொண்டேன். ஆனால் அது எனக்குரியது என்ற முடிவுக்கு நான் வரவில்லை.

எனக்கிருந்த சிக்கல்களில் ஒன்று, (குறைந்தபட்சம் கிறிஸ்தவத்தைக் குறித்து நான் அறிந்த வரையில்) மதம் விஞ்ஞானத்துடன் ஒத்துப்போவதில்லை என்பதாகும்.

**எல்லா முஸ்லிம் ஆண்களும் தம் மனைவியைக் கொடுமைப்படுத்துவார்கள்; அவர்களின் குழந்தைகளை அடிப்பார்கள்; அவர்கள் அனைவருமே வன்முறையாளர்கள்; கொலை செய்வதற்கும் தயங்கமாட்டார்கள் என்பதாக எனக்குச் சொல்லப்பட்டிருந்தது.**

இந்தப் பின்னணியில்தான், டாக்டர் மாரிஸ் புகைல் அவர்கள் எழுதிய 'விஞ்ஞான ஒளியில் பைபிளும் குர்ஆனும்' என்ற நூலை நான் வாசித்தேன். விஞ்ஞான பூர்வமான என் கேள்விகள் அனைத்துக்கும் அதில் பதில் கிடைத்தது. நவீன விஞ்ஞானத்தின் ஒளியில் நடை போடக்கூடிய ஒரு மார்க்கம் இங்கு இருக்கிறது என்பதை அறிந்து நான் வியப்படைந்தேன். ஆனால், எனது இதயத்தில் அது இதுவரை இருந்ததில்லை.

எனது மூளை நன்கு வேலை செய்யும் ஒரு கட்டம் எனக்கு வந்தது. நான் கற்றுக்கொண்ட புதிய விஷயங்கள் அனைத்தையும் குறித்து தீவிரமாகச் சிந்தித்தேன். அதன் விளைவாக என் இதயம் மென்மை அடைந்ததை நான் உணர்ந்தேன். ஒரு முஸ்லிமைப் போன்று வாழ்வது போல கற்பனை செய்ய நான் முயன்றேன். நேர்மை, தாராள மனம், நிலைகுலையாத் தன்மை, அமைதி, கண்ணியம் அன்பு, இரக்கம் ஆகியவற்றால் நிறைந்த அடக்கமான ஒரு வாழ்வை நான் கண்டேன். எல்லா வற்றுக்கும் மேலாக, அர்த்தமுள்ள வாழ்வை நான் கண்டேன்.

என்னுடைய ஈகோவை நான் விட்டுவிட வேண் டும்; என்னைவிட வலிமை வாய்ந்த ஏதோ ஒன்றுக்கு முன்னால் நான் பணிந்திட வேண்டும் என்பது எனக் குத் தெரிந்தது. இரண்டு சந்தர்ப்பங்களில், ''நீ முஸ்லி மாக ஆவதைத் தடுத்து நிறுத்துவது எது'' என என்னை நானே கேட்டுக் கொண்டேன். முதல் சந்தர்ப்பத்தில், எனக்குள் கலவரச் சூழல் ஏற்பட் டது. எனது மூளை முடக்கப்பட்டது. இரண்டா வது முறை, எந்த சாக்குப்போக்கும் வந்துவிடக்கூடாது என நான் எண்ணினேன். எண்ணியபடியே எதுவும் தடையாக வரவில்லை. எனவே நான் 'ஷஹாதாவை' மொழிந்து முஸ்லிமானேன். எல்லாப் புகழும் இறைவனுக்கே.

*தமிழில்:* **ஜொஹரா சுல்தான்**

***(நன்றி: ரேடியன்ஸ் வார இதழ், 19-25 அக்டோபர் 2014)***

சென்ற அக்டோபர் 14 அன்று மாலை இராமநாதபுரம் மாவட்டம், திருவாடனை காவல் சரகம், எஸ்.பி. பட்டினம் என அழைக்கப்படும் சுந்தரபாண்டியன் பட்டினம் காவல் நிலையத்தில் சையத் முஹம்மத் (24) என்பவர் அந்தக் காவல் நிலையச் சார்பு ஆய்வாளர் அ.காளிதாஸ் என்பவரால் சுட்டுக் கொல்லப்பட்ட செய்தி அனைத்து நாளிதழ்களிலும் விரிவாக வெளிவந்தது.

இச்சம்பவம் குறித்த உண்மைகளை அறிய 'மனித உரிமை அமைப்புகளுக்கான தேசியக் கூட்டமைப்பு (National Confederation of Human Rights Organisations – NCHRO) சார்பாக பேரா. அ.மார்க்ஸ் (தலைவர், NCHRO), வழக்குரைஞர் ரஜினி (தலைவர், மனித உரிமைகளுக்கான மக்கள் கழகம்- PUHR), வழக் குரைஞர் ஏ.சையது அப்துல் காதர், மதுரை, வழக்குரை ஞர் எஸ்.என்.ஷாஜஹான், மதுரை ஆகியோர் கொண்ட உண்மை அறியும் குழு ஒன்று அமைக்கப்பட்டது.

இக்குழு சென்ற அக் 27, 28 தேதிகளில் தொண்டி, திரு வாடனை, எஸ்.பி.பட்டினம், இராமநாதபுரம், மதுரை ஆகிய ஊர்களுக்குச் சென்று விசாரணையை மேற்கொண்டது.

தொண்டி காவல் நிலையத்தில் இது தொடர்பான வழக்கை முதலில் விசாரித்த வட்ட ஆய்வாளர் எம். துரைப்பாண்டி, எஸ்.பி பட்டினம் காவல் நிலையத்தில் பணியில் இருந்த காவலர் எம்.பாலுச்சாமி, வழக்கை தற் போது விசாரித்து வரும் சி.பி.சி.ஐ.டி யின் மதுரை டி.எஸ்.பி மன்மத பாண்டியன் ஆகியோரிடமும் பேசி யது. திருவாடனை நீதிமன்றத்தில் இக்குழுவைச் சேர்ந்த வழக்குரைஞர்கள் இக்கொலைச் சம்பவம் தொடர்பான முதல் தகவல் அறிக்கைகள் 90/2014 மற்றும் 92/2014 ஆகியவற்றைப் பார்வையிட்டுக் குறிப்பெடுத்துக் கொண்டனர். மற்றொரு அறிக்கையான 91/2014 இன் பிரதியை வழக்குரைஞர்களிடமிருந்து பெற்றுக் கொண் டோம். பிரேத பரிசோதனையின்போது அருகில் இருந்த மதுரை வழக்குரைஞர் ஜின்னாவைச் சந்தித்து கொல்லப் பட்ட சையத் முஹம்மதின் உடலின் புகைப்படங்களை யும் பெற்றுக் கொண்டோம்.

இராமநாதபுர நீதிமன்ற வளாகத்தில் சையத் முஹம்மத் கொலை தொடர்பாக விசாரணை செய்து கொண்டிருந்த நீதிமன்ற நடுவர் (JM 2) திரு வேலுசாமி அவர்களைச் சந்தித்து சாட்சிகள் அளிக்கும் முழு விவரங் களையும் பதிவு செய்யுமாறு எம் குழுவில் இருந்த வழக்குரைஞர்கள் வேண்டிக் கொண்டனர். இத்தொகுதி யின் சட்டமன்ற உறுப்பினர் பேரா.எம்.எச்.ஜவாஹிருல் லாஹ் அவர்களிடமும் பேசினோம். சையது முஹம்மதை துப்பாக்கியால் சுட்டு அவரது கொலைக்குக் காரணமான எஸ்.ஐ.காளிதாசுடன் தொலைப்பேசியில் பேசினோம்.

**காவல்துறையின் கூற்றில் உள்ள முக்கிய சில முரண்கள்**

1.மதியம் சுமார் 1.30 மணி அளவிலேயே சையத் முஹம்மத் காவல் நிலையத்திற்குக் கொண்டுவரப்பட்ட தற்கு நேரடி சாட்சிகள் உள்ளன. 2.30 மணி அளவில் அவர் எஸ்.ஐ அறையில் ஜட்டியுடன் உட்கார வைக்கப்பட்டிருந் ததை சையதின் மாமன்கள் சகுபர் அலி மற்றும் அபுதாஹிர் ஆகியோரும் பார்த்துள்ளார்கள். ஆனால் 4 மணி அள வில்தான் காவலர்களை அனுப்பி அவரைக் கூட்டி வந்த தாகக் காவல்துறை சொல்வது அப்பட்டமான பொய்

2. மாலை நான்கு மணிக்குத்தான் சையத் முஹம்மத் காவல் நிலையத்துக்குக் கொண்டு வரப்பட்டதாகவும் காளிதாஸ் விசாரிக்கத் தொடங்கியவுடன் சையத் முஹம்மத் மேசை மீதிருந்த கத்தியை எடுத்து அவரைக் குத்த, தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டி காளிதாஸ் மும்முறை அவரைச் சுட்டு வீழ்த்தியதாகவும் இராமநாதபுரம் காவல்துறை கூறுகிறது. அப்படியானால் நான்கு மணிக்குப் பிறகு விசாரணை தொடங்கி 4.30க்குள் எல்லாம் முடிந்து விட்டதாக ஆகிறது. ஏனெனில் சுமார் 4.30 மணிக்கெல்லாம் தனக்குக் காவல் நிலையத்



# எஸ்.பி. பட்டினம் காவல் நிலையக் கொலை

# உண்மை அறியும் குழு அறிக்கை

திலிருந்து அழைப்பு வந்ததாக ஆம்புலன்ஸ் டிரைவர் கூறுகிறார். எனில் சையத் முஹம்மதின் உடம்பில் 18 காயங்கள் எப்படி வந்தன?

3. நான்கு மணிக்குப் பின் காவல் நிலையத்திற்குக் கொண்டுவரப்பட்ட சையத் முஹம்மத் தேகப் பரிசோதனை செய்யப்பட்ட போது அவரது கைலியில் ஓரடி நீளமுள்ள கத்தி கண்டெடுக்கப்பட்டு அவரது கைக் கெட்டுமாறு எஸ்.ஐயின் மேசை மீது வைக்கப்பட்டதாம். ஆனால் 2.30 மணி வாக்கிலேயே அவர் உடை எல்லாம் கழற்றப்பட்டு வெறும் ஜட்டியுடன் உட்கார வைக்கப்பட்டிருந்துள்ளார். எனில் கைலிக்குள்ளிருந்து கத்தி உருவப்பட்டது எப்படி? கைலி மற்றும் சட்டையுடன் அவர் அடித்தும் சுட்டும் வீழ்த்தப்பட்டிருந்தால் குண்டுக் காயங்கள் மற்றும் இரத்தக்கறையுடன் கூடிய சையத் முஹம்மதின் ஆடைகள் என்னவாயிற்று?


சையத் முஹம்மத்

4. அந்தக் காவல் நிலையம் சுமார் 1000 சதுர அடிக்குள் உள்ள ஒரு சிறிய கட்டிடம். எஸ்.ஐயினுடைய அறைக்கும், வெளியே காவலர்கள் நின்றிருந்த அறைக்கும் சுமார் 5 அடித் தொலைவு கூட இருக்காது. மூன்று முறை கத்தியால் குத்தி, மூன்று முறை துப்பாக்கியால் சுடும் வரை பிற காவலர்கள் என்ன செய்து கொண்டிருந்தனர்? உள்ளே நுழைந்து கத்தி வைத்துள்ள நபரைக் கொல்லாமலேயே காளிதாசைக் ''காப்பாற்றியிருக்க'' இயலாதா?

5.காளிதாஸ் தன் வாக்குமூலத்தில் மூன்று முறையும் சையத் முஹம்மதை இடது மார்பில் சுட்டதாகவே கூறுகிறார். ஆனால் குண்டுக் காயங்களில் இரண்டு இரு கைகளில் உள்ளன. இதென்ன? முதல் இரு குண்டுகள் சுடப்பட்ட பின்னும்கூட சையத் முஹம்மத் கொலை செய்யும் நோக்கில் அத்தனை ஆவேசமாக ஓரடி நீளமுள்ள கத்தியைக் கையால் சுழற்றித் தாக்கினார் என்பது நம்பக் கூடியதா?

6. புகாரைக் கையால் எழுதக் கூட இயலவில்லை எனத் தன் வாக்குமூலத்தில் கூறும் காளிதாஸ் எப்படி துப்பாக்கியை மூன்று முறை காயம் பட்ட கையாலும் விரலாலும் சுட்டிருக்க இயலும்?


அ.காளிதாஸ்

7. ஆம்புலன்சில் ஏற்றும்போது சையத் முஹம்மத் உயிருடன் இருந்தார் எனக் கூறும் காளிதாஸ் ஏன் தானும் சிகிச்சைக்கு அதே வண்டியில் சென்றிருக்கக் கூடாது?

8. ஆம்புலன்சில் ஏற்றப்படும் போது பிணத்தைத் தூக்கி எறிந்துள்ளனர். டிரைவர் ஆசாத் அதைக் குறிப்பிடுகிறார். உயிருடன் இருப்பவருக்கும், பிணத்திற்கும் வெவ்வேறு படுக்கைகள் உண்டு. உயிருடன் இருப்பவருக்கான படுக்கையில் பிணத்தை ஏன் ஏற்றுகிறீர்கள் என அவர் கேட்டுள்ளார். இதெல்லாம் உண்மையா இல்லையா? ஆம்புலன்சில் ஏற்றப்படும் போது சையத் முஹம்மத் உயிருடன் இருந்ததாக ஏன் இந்தப் பொய்?

9. துப்பாக்கிச் சூடு நடந்த பின்னும் காளிதாஸ் நடந்து திரிந்துள்ளார். இராமநாதபுரம் அரசு மருத்துவமனையில் அவர் நடந்து சென்றதை அங்குள்ளவர்கள் பார்த்துள்ளனர். அவரை அப்போது படம் எடுக்கவோ, இல்லை கட்டு போடும்போது படம் எடுக்கவோ கூடாது என அங்கு படம் எடுக்க முயன்றவர்கள் தடுக்கப்பட்டுள்ளனர். ஆனால் கட்டுகள் போடப்பட்டு அவர் ''ஸ்ட்ரெச்சரில் கொண்டு வரப்பட்டபோது'' கூப்பிட்டுப் படம் எடுக்குமாறு சொல்லப்பட்டுள்ளது.

10. தன்னை ஆடு உரிக்கும் கத்தியால் சையத் முஹம்மத் கொல்ல வந்ததாக அருள்தாசிடம் புகார் பெறப்பட்டுள்ளது. அப்படி நடந்தது மதியம் 1.15 மணிக்கு எனச் சொல்லப்பட்டுள்ளது. அவ்வளவு சீரியசான விசயத்திற்கு கூப்பிடு தூரத்தில் உள்ள காவல் நிலையத்தில் ஒரு அரைப் பக்க புகாரை எழுதித்தர மாலை 3 மணிவரை ஆகியுள்ளதாகக் கூறப்படுவதும், ஏதாவது அந்தக் ''கொலை முயற்சிக்கு'' நோக்கம் கற்பிக்க வேண்டும் என்பதற்காக கிறிஸ்தவப் பள்ளர் இனத்தவருக்கும் முஸ்லிம்களுக்கும் இடையில் பகை உள்ளது போலக் காட்டுவதும் அபத்தம். அப்படியான எந்த முரணும் எஸ்.பி பட்டினத்தில் அவ்விரு சமூகங்களுக்கும் இடையில் இல்லை.

### எமது பார்வைகளும் பரிந்துரைகளும்

இது அப்பட்டமான ஒரு காவல் நிலையக் கொலை. சையத் முஹம்மத் கடுமையாக அடிக்கப்பட்டுள்ளார். பின் துப்பாக்கியால் சுடப்பட்டுள்ளார். அவரிடம் கத்தி இருந்தது என்பதும் அதனால் அவர் காளிதாசைக் கொல்ல வந்தார் என்பதும் அப்பட்டமான பொய்கள். சையத் முஹம்மதுக்குக் குடிப் பழக்கம் இருந்த போதிலும் அடிப்படையில் அமைதியானவர் என்பதையும் இதுவரை அவர் மீது எந்த வழக்கும் கிடையாது என்பதையும் அனைவரும் சுட்டிக் காட்டினர். அடித்தது அல்லது சுட்டது அல்லது இரண்டினாலும் எஸ்.ஐயின் அறையிலேயே சையத் முஹம்மத் கொல்லப்பட்டுள்ளார். இந்த மூன்றில் எந்த வகையில் மரணம் நிகழ்ந்திருந்தாலும் அது கொலைதான். ஏனெனில் சையத் முஹம்மதிடம் காவல்துறை சொல்வது போலக் கத்தி ஏதுமில்லை. காளிதாசின் உடம்பில் உள்ள காயங்கள் தன்னைக் கொலைக் குற்றத்திலிருந்து காப்பாற்றிக் கொள்வதற்காக அவரே ஏற்படுத்திக் கொண்ட மெல்லிய பொய்க் காயங்கள்.

இந்நிலையில் சி.பி.சி.ஐ.டியின் டி.ஐ.ஜி கணேச மூர்த்தி இரண்டு நாள்களுக்கு முன், ''இறந்த பின்பே சுடப்பட்டுள்ளது உறுதியானால் எஸ்.ஐ மீது கொலை வழக்குப் பதியத் தயாராக உள்ளோம்'' (தி இந்து, அக் 27) எனக் கூறியுள்ளது ஏமாற்றமளிக்கிறது. அதாவது சையத் முஹம்மத் உயிருடன் இருக்கும்போது சுடப்பட்டிருந்தால் அது கொலை வழக்கு இல்லையாம். தற்காப்புக்காகச் சுடப்பட்டதாம். ஆக சையத் முஹம்மதிடம் கத்தி இருந்தது எனவும், அதனால் அவர் காளிதாசைக் கொல்ல வந்தார் என்பதும் அவர் உயிருடன் இருக்கும் போது சுடப்பட்டார் என்பதாலேயே உண்மை ஆகிவிடுகிறது என்பது டி.ஐ.ஜியின் கூற்றிலிருந்து பெறப்படுகிறது. அவர் கத்தி வைத்திருந்ததற்கு வேறு நிரூபணம் தேவை இல்லை என்றாகிறது. இதை ஏற்க இயலாது.

துப்பாக்கியால் சுட்டது காளிதாஸ்தான் என்ற போதிலும் அன்று காவல் நிலையத்தில் இருந்த மற்றவர்களும் பல்வேறு நிலைகளில் இக்குற்றத்தில் பங்கு பெற்றுள்ளனர். மற்ற காவலர்களும் சையத் முஹம்மதைத் தாக்கியுள்ளனர். குற்றச் செயலை மறைக்கவும், பொய்யான முதல் தகவல் அறிக்கைகள் எழுதுவது, சாட்சியம் சொல்வது உள்பட பல்வேறு வகைகளில் பங்கு பெற்றுள்ளனர். காவல் நிலையத்தில் வாட்டர் டேங்க் ஒன்றைக் கட்டுவதற்காகப் பார்வையிட வந்த ரத்தினம் என்பவர் இதை நேரில் பார்த்ததாகக் கூறியுள்ளதைச் சிலர் பதிவு செய்துள்ளனர். காவல் நிலையத்தில் அப்போது இருந்த இதர ஆறு பேரையும் இன்று விசாரணையிலிருந்து விலக்கி, அவர்களை வெறுமனே ஆயுதப் படைக்கு மாற்றியுள்ளதை நாங்கள் வன்மையாகக் கண்டிக்கிறோம். அவர்களும் தற்காலிகப் பணி நீக்கம் செய்யப்பட்டு குற்ற விசாரணைக்கு உட்படுத்தப்பட வேண்டும். குற்றத்தை மறைக்க முயன்றதில் டி.எஸ்.பி சேகருக்கும் முக்கிய பங்கு உள்ளது. எஸ்.பி, ஏ.டி.எஸ்.பி ஆகியோரும் திருப்பாலக்குடியில் சுமார் 20 நிமிடங்கள் ஆம்புலன்சை நிறுத்திப் படங்கள் எடுத்துள்ளனர். எல்லோருடைய ஒப்புதலுடனும்தான் இந்தப் பொய்யான கதை உருவாக்கப்பட்டுள்ளது. இதுகுறித்து அவர்களும் விசாரிக்கப்பட வேண்டும். 14ந் தேதி மாலை காளிதசுக்கும் மற்றவர்களுக்கும் நடைபெற்ற தொலைப்பேசி உரையாடல்கள் பெறப்பட்டுப் புலனாய்வு செய்யப்பட வேண்டும்.

சையத் முஹம்மதின் ஆடைகள், பயன்படுத்தப்பட்டதாகச் சொல்லப்படும் கத்தியில் உள்ள கைரேகைகள், துப்பாக்கிக் குண்டுகள் துளைத்துள்ள நிலை முதலியனவும் புலனாய்வுக்கு உட்படுத்தப்படுவதோடு அவை குறித்த உண்மைகளும் வெளியிடப்பட வேண்டும். இனி இப்படியான கொலைகளில் பிரேத பரிசோதனை செய்யும்போது ballistic experts இருக்க வேண்டியது கட்டாயமாக்கப்பட வேண்டும்.

எஸ்.ஐ காளிதாஸ் குறித்த வேறு சில உண்மைகளும் புலனாய்வு செய்யப்படவும் விளக்கப்படவும் வேண்டும். அவர் மீது லஞ்சக் குற்றச்சாட்டுகளும் சொல்லப்படுகிறது. பண்டிகையை ஒட்டி பெரும் வசூல் வேட்டையை அவர் நடத்தியதாகவும், தான் வேலை செய்யும் இறால் பண்ணை உரிமையாளர் 5,000 ரூபாய் கொடுத்ததை சையத் முஹம்மத் எல்லோரிடமும் சொல்லித் திரிந்தது காளிதாசுக்கு அவர் மீது ஆத்திரம் ஏற்படக் காரணமாயிற்று எனவும் ஒரு பேச்சு உள்ளது. அப்படியான ஒரு பேச்சு உள்ளதை இப்பிரச்னையில் உண்மையை வெளிக் கொணர தொடக்கம் முதல் செயல்பட்டு வரும் சட்டமன்ற உறுப்பினர் பேரா. ஜவாஹிருல்லாவும் உறுதிப்படுத்தினார். அதேபோல காளிதாஸ் இந்துத்துவ அமைப்புகளுடன் தொடர்பு கொண்டுள்ளவர் எனவும் கூறப்படுகிறது. அவர் முகநூல் கணக்கு ஒன்று வைத்திருந்ததாகவும், இந்தக் கொலையை ஒட்டி அது உடனடியாக நீக்கப்பட்டுள்ளதாகவும் முகநூல் பக்கங்களிலேயே சில ''ஸ்க்ரீன் ஷாட்'' களுடன் செய்திகள் வெளியாகியுள்ளன. இதுவும் தீர விசாரிக்கப்பட வேண்டும். காளிதாசுக்கு ஆதரவாக பா.ஜ.க மற்றும் இந்து முன்னணி அமைப்புகளைச் சேர்ந்த எச்.ராஜா, இராம கோபாலன் ஆகியோர் ஆதரவு தெரிவித்திருப்பதும் இந்த ஐயத்தை உறுதியாக்குகிறது.

காவல் நிலைய, சிறைச்சாலைச் சாவுகளில் தமிழ்நாடு முன்னிற்கிறது என அரசு வெளியிடும் தரவுகளே கூறுகின்றன. இன்றைய அ.தி.முக அரசின் முன்னாள் முதல்வர் ஜெயலலிதா இக்காவல் நிலையச் சாவுகளை ''நீதியைக் கேலிக் கூத்தாக்குவது'' (travesty of justice) எனச் சொல்லிக் கொண்டே இதுபோன்ற குற்றம் செய்யும் காவலர்களைப் பாதுகாத்து வந்தார். இப்படிக் காவல்துறை அத்துமீறல்களைக் கண்டு கொள்ளாமல் இருப்பதில் பிற கட்சிகளும் எள்ளளவும் குறைந்ததில்லை. இந்த நிலை மாறுவது ஒன்றே காவல் நிலையச் சாவுகள் நிறுத்தப்படுவதற்கான ஒரே வழி. அத்துமீறும் காவலர்களை 'ஹீரோ''க்களாக முன்னிறுத்தும் ஊடகங்கள், இவர்களோடு இணைந்து செயல்படும் மருத்துவர்கள் உள்ளிட்ட பிற துறையினர் எல்லோரும் கடுமையாகக் கண்டிக்கப்பட வேண்டும்.

இந்த அறிக்கையை எழுதிக் கொண்டுள்ளபோது முஸ்தபா எனும் முஸ்லிம் ஒருவர் எஸ்.பி பட்டனக் காவல் நிலையத்தில் எஸ்.ஐ யாக நியமிக்கப்பட்டுள்ளதாக அறிகிறோம். இச்செய்தி வரவேற்கத்தக்கது. முஸ்லிம்கள் அதிகமுள்ள பகுதிகளில் போதிய அளவில் முஸ்லிம் அதிகாரிகள் இருக்க வேண்டும் என்பதை நாங்கள் இருபதாண்டுகளாகச் சொல்லி வருகிறோம். சச்சார் அறிக்கையும் இதை வற்புறுத்தியது. எஸ்.பி பட்டனம் மட்டுமின்றி கிழக்குக் கடற்கரையோரம் முழுவதும் இந்நிலை மேற்கொள்ளப்பட வேண்டும்.

நீதிமன்றமே பரிந்துரைத்துள்ளபடி ஏழ்மை நிலையிலுள்ள சையத் முஹம்மதின் குடும்பத்திற்கு அளிக்கப்பட்டுள்ள இழப்பீட்டுத் தொகையை அதிகப்படுத்த வேண்டும். அவரது வீட்டில் ஒருவருக்கு அரசுப் பணி அளிக்கப்பட வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக சி.பி.சி.ஐ.டி விசாரணை விரைந்து முடிக்கப்பட்டு குற்றவாளிகள் தண்டிக்கப்பட வேண்டும்.

அந்த மூன்று பேரும் ஏழாம் வகுப்பு மாணவர்கள். மதிய உணவு இடைவேளைக்குப் பிறகு தாமதமாக வகுப்புக்கு வந்தார்கள். விசாரித்ததில், பள்ளிக்கு அருகில் உள்ள இணையதள மையத்தில் 'வீடியோ கேம்' விளையாடிவிட்டு வந்ததாகச் சொன்னார்கள். வகுப்பாசிரியருக்குச் சந்தேகம். மூவரையும் தனித்தனியே விசாரித்ததில் 'வீடியோ கேம்' என்கிற பெயரில் ஆபாசக் காட்சிகளை இணையதளத்தில் பார்த்துவிட்டு வந்ததை ஒப்புக்கொண்டார்கள்.

குற்ற உணர்வுடன் கண்ணீரோடு நின்ற மாணவர்களைத் தண்டிக்க மனம் வரவில்லை என்பது ஒருபுறம். தண்டிக்க விரும்பினாலும் அதற்குப் பள்ளிக்கூட விதிகளோ கல்வி உரிமைச் சட்டமோ அனுமதிக்கவில்லை என்பதே யதார்த்தம்.

அவனை வேகமாகக் கடந்து உள்ளே எட்டிப் பார்த்தவருக்கு அதிர்ச்சி. உள்ளே இரண்டு மாணவர்கள் மது அருந்திக் கொண்டிருந்தார்கள். கதவருகே நின்ற மாணவன் யாராவது வந்தால் எச்சரிக்கை சமிக்ஞை செய்வதற்காக நிறுத்தப்பட்ட 'காவலாளி' என்பதும் மது அருந்துவதில் பங்காளி என்பதும் தெரிந்தது.

மூன்று மாணவர்களையும் தலைமை ஆசிரியர் அறைக்கு அழைத்து விசாரித்ததில் மதுக்கடையில் இருந்து மதுவை பள்ளிக்கு வாங்கி வந்தவன் 'இவன் தான்' என்று ஒருவரை மாற்றி ஒருவர் குற்றம் சுமத்திக் கொண்டனர்.

பள்ளி நிர்வாகம் மாணவர்களின் எதிர்காலத்தின் பொருட்டு அவர்களை பள்ளியில் இருந்து நீக்கவோ





• மா.சுரேஷ்

# வெண்ணிறப் புகையும் பொன்னிற திரவமும்

ஆபாசக் காட்சிகளைப் பார்த்துவிட்டு வந்த ஏழாம் வகுப்பு மாணவர்கள், அக்காட்சிகளைப் பார்க்கும் தருணத்திலும் பார்த்த பிறகும் எவ்வகையான உடல் பாதிப்புகளுக்கும் மனஉணர்வுகளுக்கும் ஆளாகி இருப்பார்கள் என்பதை ஆய்வுக்கு உட்படுத்தாமலே உணர்ந்து கொள்ள இயலும்.

இயற்பியல் ஆய்வுக்கூடம். மேல்நிலை வகுப்பு. செயல்முறை வகுப்பு நடக்காத நேரம். கதவருகே ஒரு மாணவன் நிற்கின்றான். வகுப்பில் இருக்க வேண்டியவன் ஆய்வுக் கூடத்தின் கதவருகே தேவையில்லாமல் நிற்பது ஆசிரியருக்குச் சந்தேகத்தை உண்டாக்கியது.

அல்லது வேறு எந்த வகையான தண்டனைக்கு உட்படுத்தவோ இல்லை. இனிவரும் நாள்களில் அவ்வாறு நடந்தால் மாற்றுச் சான்றிதழ் கொடுத்து பள்ளியில் இருந்து வெளியேற்றப் படுவார்கள் என்று மிரட்டலான ஓர் எச்சரிக்கை விடுத்து அவர்கள் அனுப்பி வைக்கப்பட்டனர்.

மூன்றாவது நிகழ்வு. ஆறு பேரும் ஆறாம் வகுப்பு மாணவர்கள். அவர்கள் அனைவரும் பாக்கு மெல்லுவதாக அதே வகுப்பைச் சேர்ந்த வேறு மாணவன் 'காட்டிக்கொடுத்து விட்டான்'. ஆறு பேரையும் அழைத்து விசாரித்ததில், எவ்வகையான பாக்குப் பொட்டலங்களை நுகர்வதற்கு அரசு தடைவிதித்து உள்ளதோ அந்த

வகையறாக்களை அவர்கள் பயன்படுத்தி இருந்ததை அம்மாணவர்களின் வாய் நிறத்தில் இருந்தும் 'வாசனை யிலிருந்தும்' அறிந்துகொள்ள முடிந்தது. (அந்தப்) பாக்குகளை அவர்கள் பயன்படுத்துவதை அவர்கள் ஒப்புக் கொண்டார்கள்.

''உண்மையை ஒப்புக்கொண்ட நீங்கள் நேர்மையான மாணவர்கள்தான். இனி நீங்கள் இப்படிப்பட்ட தவ றைச் செய்யமாட்டீர்கள் என்று நான் நம்புகிறேன். உண்மை பேசிய உங்கள் எல்லாருக்கும் சாக்லெட்'' என்று அவர்களுக்கு சாக்லெட் கொடுத்தனுப்பிய தலைமை ஆசிரியரின் நேர்மறையான அணுகு முறையை மறக்க முடியாது.

மேற்குறிப்பிட்ட மூன்று நிகழ்வுகளும் ஒரே நாளில் நடந்தவை அல்ல. ஒவ்வொன்றும் ஒரு கல்வி ஆண்டின் வெவ்வேறு தருணங்களில் கால இடைவெளி விட்டு, ஒன்றோடு ஒன்று தொடர்பற்று நிகழ்ந்த நிகழ்வுகளே.

ஆனால் மூன்றும் பள்ளி மாணவச் சமூகத்தில் ஒரே பள்ளியில் நிகழ்ந்தவை என்கிற ஒருமைப்பாடு உள்ளவை. (இந்த மூன்று நிகழ்வுகளைத் தவிர வேறு ஒழுக்கவிதி மீறலான சம்பவங்கள் அப்பள்ளியில் நடக்கவேயில்லை என்று வாசகர்கள் கருதத் தேவை யில்லை. இவை எடுத்துக்காட்டுகள் மட்டுமே)

மது அரசாங்கத்தால் தடை செய்யப்பட்ட பொருள் அல்ல. தமிழகத்தில் மதுவிலக்கு நடைமுறையில் இல்லை. ஆகவே அது கிடைப்பதற்கொன்றும் அரிதான பொருள் அல்ல என்றாலும், பதின்மவயது மாணவர் களின் கையில் எளிதாகக் கிடைக்கக்கூடிய அளவுக்கு மது தமிழகத்தில் 'நிறைகுடமாக' உள்ளது. மதுவை இயற்பியல் ஆய்வுக்கூடத்தில் அருந்திய அம்மாணவர் களில் யாராவது ஒருவர் தனது வீட்டில் தந்தையிட மிருந்து அதைக் களவாடி வந்திருக்கலாம்; அல்லது 'டாஸ்மாக்' கடையில் பள்ளிச் சீருடை இல்லாமல் நேரடியாகச் சென்று வாங்கி வந்திருக்கலாம். மாறாக தொலைவில் நின்று ஒரு ஏவலாள் மூலமாக வாங்கிவரச் செய்து கொண்டு வந்திருக்கலாம். அல்லது வேறு ஏதோ ஒரு வகையில் எப்படியோ அவர்களுக்கு மதுபாட்டில் கிடைத்திருக்கலாம். மாணவர்கள் கைக்கு மது வந்து சேரும் வழி எது என்பதைவிட முதிர்விலா வயதினர் களுக்கும் கிடைக்கக்கூடிய வகையில் மது மிகவும் 'மலிவாக' 'பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்திருக் கும் பரிபூரண ஆனந்தமாக' இருக்கிறது. இருந்து விட்டுப் போகட்டும்.

சட்டப்படி வயது வந்தவர்கள் மட்டும்தான் மது என்கிற ஓடையிலே இறங்கி நீந்துவதற்கு அரசாங்கம் அனுமதி அளித்திருந்தாலும், அவ்வோடையின் ஓரத்தில் நின்று வேடிக்கை பார்க்கும் சிறுவர்கள் மீது மதுத்துளி தெறிக்காமல் இருக்கவும் அவர்களை அவ்வோடை வெள்ளம் உரசி நனைத்துச் செல்லாமல் இருக்கவும் உறுதியான தடுப்பு அரண்கள் இல்லாமல் இருப்பது வேதனைக்குரியது. வயது வந்தவர்கள் உரிமத்துடன் துப்பாக்கி வைத்திருப்பது எளிதாகி, மலிவாகி பள்ளிச் சிறுவர்கள் துப்பாக்கி தூக்கி வன்முறையில் இறங்கும் அமெரிக்கக் கலாச்சாரத்தோடு ஒத்துப்போவது போலத் தான் இந்த விஷயமும் இருக்கிறது.

மாணவர்களின் குடும்பப் பின்னணியும், அவர்கள் வாழும் சமூகச் சுழலும் அவர்களை எதிர்கால குடிமக் களாக வார்த்தெடுப்பதில் முக்கியக் காரணிகளாகச் செய லாற்றுகின்றன. அத்துடன் பள்ளிக்கூடச் சூழலும் மிக முக்கிய, தவிர்க்க இயலாத பங்காற்றுகிறது. காரணம் பள்ளிக்கூடங்கள் குழந்தைகளை சமூகமயமாக்கும் முகமைகள் (socialising agents) ஆகும்.

உளவியல் ரீதியாக மாணவர்கள், தங்களை வளர்ந்து விட்ட பெரிய மனிதர்களாக இந்தச் சமூகம் அடை யாளம் காணவேண்டும் என்று அடிமனத்தில் ஆசை கொள்கிறார்கள். அந்த அடிமன ஆசையே அவர்களைச் செயலாற்ற உந்தித் தள்ளுகிறது. அத்தகைய உந்துதல்கள் அதிவிரைவாக அங்கீகாரத்தை அடைந்துவிட வேண்டும் என்ற முனைப்பில் அனுமதிக்கப்பட்ட வழி எது, தடை செய்யப்பட்ட வழி எது என்று பகுத்தறிந்து செயலாற்றும் பொறுமையை இழக்கச் செய்து விடுகிறது. சமூகத்தில் அங்கீகரிக்கப்பட வேண்டும் என்கிற வேகம் மட்டுமே அவர்களை இயக்குவதால், விவேகமற்ற எளிதான குறுக்கு வழியிலேயே அவர்கள் பயணிக்கத் தொடங்கி விடுகிறார்கள். அப்படி அவர்களால் மேற்கொள்ளப் படும் செயற்பாடுகளில் கிளுகிளுப்பும், கிளர்ச்சியும் பெறக்கூடிய தன்மை இருந்து விட்டால் அவற்றில் அவர்கள் செலுத்தும் நாட்டத்தின் அளவு அதிகரிக்கும் என்பது சொல்லாமலே விளங்கும்.

இத்தகைய கண்மூடித்தனமான, கட்டுப்பாடற்ற வேகமான வாழ்க்கைப் பயணத்தில் வேகத் தடைகளாக வும், விவேக வழிகாட்டிகளாகவும் விளங்கும் நன்னெறிக் கல்வி, பள்ளிப் பாடத்திட்டத்தில் இருக்க வேண்டியது மதிப்பெண் கலாச்சாரத்தைவிட மிக மிக முக்கியமானது.

எவையெல்லாம் அரசாங்கத்தால் தடை செய்யப்பட் டனவோ அவையெல்லாம் எவ்விதத் தடைகளுமில் லாமல் நுகரும் காட்சியை சின்னத் திரையும் பெரிய திரையும் காட்டுகின்றன. திரையின்கீழ் இடதுபக்க ஓர மாக 'மது அருந்துவது நாட்டுக்கும், வீட்டுக்கும், உடல் நலத்துக்கும் கேடு' என்று காட்டுவதன் மூலம் தங்களுக் கான தணிக்கைச் சட்டப் பாதுகாப்பை அவை தேடிக் கொள்கின்றன.

வெண்புகை ஊதலும், பொன்னிற திரவம் உறிஞ்சு தலும் காட்டப்படாத திரைப்படங்கள் அண்மையில் ஏதாவது வந்திருந்தால் அதைக் கண்டுபிடித்து விருது வழங்கலாம் என்று சொல்லும் அளவுக்கு மது அருந்து தலும், புகைப்பிடித்தலும் காட்சிப்படுத்தப்படாத படங் களே இல்லை எனலாம்.

லாகிரி பொருளாகக் கருதப்பட்ட பான் மசாலா பாக்கு வகைகள், தமிழகத்தில் தடை செய்யப்பட்ட காலம் தொட்டு இல்லாமல் போய் இருக்க வேண்டும். மாறாக ஆறாம் வகுப்பு மாணவர்களுக்குக்கூட கிடைக்

கும் வகையில் எளிதாகவும் மலிவாகவும் சந்தையில் புழக்கத்தில் உள்ளன என்றால் தடைக்குமுன் வெளிப் படையாகத் தயாரிக்கப்பட்ட பாக்குகள் தடைக்குப்பின் மறைமுகமாகத் தயாரிக்கப்பட்டு சந்தைப்படுத்தப்படு கின்றன என்பதையே காட்டுகிறது. அப்படியானால் தடை என்பது மறைமுகத் தயாரிப்புக்கான 'இரகசிய சமிக்ஞை' என்று சமூக விரோதிகள் பொருள்கொள் கிறார்கள் என்றுதான் எடுத்துக்கொள்ள வேண்டி யிருக்கிறது.

இணையதள மையங்களைக் கண்காணிக்கும் முறையோ அல்லது அமைப்போ வலுவாக இல்லாத தையே ஏழாம் வகுப்பு மாணவர்கள் ஆபாசக் காட்சி களைப் பார்த்துவிட்டு வந்த நிகழ்வு எடுத்துக்காட்டு கிறது. கொலை மிரட்டலோ, அல்லது 'ஈவ்டீசிங்' போன்ற பகடி செய்யும் செய்திகளோ இணையத்தின் மூலமாக அனுப்பப்பட்டு, அதனால் பாதிக்கப்பட்டவர் புகார் அளிக்கும் தருணங்களில் மட்டும் இணையதள மையங்கள் கண்காணிப்பு, கண்டிப்பு, தண்டிப்புக்கு உள்ளாக்கப்படுகின்றன.

மாணவர்களின் எதிர்காலமே பாழாகும் வகையில் ஆபாசக் காட்சிகளைப் பார்க்க அனுமதிக்கும் மையங் களைக் கண்காணிக்க வேறு வகையான உத்திகளைக் கையாள வேண்டி இருக்கிறது. அவை கண்காணிப்பு வலைக்குள் இருந்து இணையதள மையங்கள் தப்பி விடாத உத்திகளாக இருக்க வேண்டும். அப்படிப்பட்ட உத்திகளைக் கண்டுபிடிக்க அத்துறை சார்ந்த தொழில் நுட்ப வல்லுநர்கள் தங்களின் இன்றியமையாப் பங் கினை அளிக்க வேண்டும். அத்துமீறப்படும் இப்படிப் பட்ட சமூக நோய்கள் தீர்க்கப்பட இரண்டுவிதமான கடமைகள் சரிவர ஆற்றப்பட வேண்டி உள்ளன. ஒன்று சமூகத்தின் கடமை; அடுத்தது சட்டத்தின் கடமை.

சமூகக் கடமையை ஆற்ற வேண்டியவர்கள் முதலில் பெற்றோர்களும் ஆசிரியர்களும்தான். மாணவர்கள் மனதில் ஏட்டுக்கல்வி வாயிலாக கிடைக்கும் முன் மாதிரிகளைவிட தங்கள்முன் நாள்தோறும் நடமாடும் முன்மாதிரிகளே ஆழமான அர்த்தமுள்ள பதிவுகளை உண்டாக்குகிறார்கள். அப்பதிவுகளின் விளைவே



**இத்தகைய கண்மூடித்தனமான, கட்டுப்பாடற்ற வேகமான வாழ்க்கைப் பயணத்தில் வேகத் தடைகளாகவும், விவேக வழிகாட்டிகளாகவும் விளங்கும் நன்னெறிக் கல்வி, பள்ளிப்பாடத்திட்டத்தில் இருக்க வேண்டியது மதிப்பெண் கலாச்சாரத்தைவிட மிக மிக முக்கியமானது.**

அவர்களின் எதிர்கால வாழ்க்கையை நிர்ணயிக்கும் காரணிகளாக அமைந்து விடுகின்றன. ஆகவே பெற் றோர் தங்கள் பிள்ளைகளின் மனதில் நேர்மறையான பதிவுகளை ஏற்படுத்தும் வகையில் தங்களின் பழக்க வழக்க நடவடிக்கைகளை மேற்கொள்வது சாலச் சிறந் தது. அதற்கு ஈடாக ஆசிரியச் சமூகத்தின் கல்விசார் பங் களிப்பும் வழிகாட்டு நெறிமுறைகளும் அமையும்போது மாணவர்களின் வாழ்க்கையில் சிறப்பு கூடும் என்பதில் ஐயமில்லை.

அடுத்து சட்டத்தின் கடமையைக் கண்காணிக்க வேண்டிய பொறுப்பு அரசின் கையில்தான் உள்ளது. இயற்றப்பட்ட சட்டம் நடைமுறைப்படுத்தப்பட நிர்வாக இயந்திரம் தனது இயக்கத்தின் போக்கில் சிக்கலின்றி தடைசெய்யப்பட்டவை தலைகாட்டாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இப்படிப்பட்ட கண்காணிப்புப் பணியின்போது நிர்வாகமானது அசட்டையாக சற்று கண் உறங்கினாலும் அந்த இடைவெளியில் சமூக விரோத சக்திகள் தனது வாலை ஆட்டத் தொடங்கிவிடும்.

சமூகமும் சட்டமும் கைகோர்த்து கடமை ஆற்றும் பொழுது களையப்பட வேண்டிய களைகள் பிடுங்கப் பட்டு வளர வேண்டிய பண்புப் பயிர்கள் வளர்ந்து ஜன நாயகத் தோட்டம் செழிக்கும். களையெடுக்க நாமும் கைகொடுப்போம்.

***(கட்டுரையாளரைத் தொடர்பு கொள்ள : 9488983798)***

# வாழ்க்கைத் துணையின்றி வாழ வேண்டாம்!

**உ**ங்களில் வாழ்க்கைத் துணையின்றி இருப்பவர்களுக்கும்,[50] மேலும் உங்களுடைய ஆண் - பெண் அடிமைகளில் நல்லவர்களுக்கும்[51] திருமணம் செய்து வையுங்கள்.[52] அவர்கள் வறிய வர்களாயிருந்தால் அல்லாஹ் தன்னுடைய அருளால் அவர்களை தனவந்தர்களாக்குவான்.[53] அல்லாஹ் மிகவும் விசாலமானவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். திருமணத் திற்குரிய வசதி வாய்ப்பைப் பெறாதவர்கள் அல்லாஹ் தன்னுடைய அருளால் அவர்களுக்கு அந்த வாய்ப்பை வழங்கும் வரை ஒழுக்கத்தூய்மையை மேற்கொள்ளட்டும்.[54]

உங்களுடைய அடிமைகளில் எவர்கள் 'முகாத்தபத்' கோருகின்றார்களோ[55] அவர்களிடம் நன்மை இருப்பதாக நீங்கள் அறிந்தால்[57] அவர்களோடு 'முகாத்தபத்' செய்து கொள்ளுங்கள்.[56] மேலும், அல்லாஹ் உங்களுக்கு வழங்கியிருக்கும் செல்வத்திலிருந்து அவர்களுக்கு வழங்குங்கள்.

50. *மூலத்தில் 'அயாமா' என்கிற சொல் ஆளப்பட் டுள்ளது. இது அய்யிம் என்கிற சொல்லின் பன்மை ஆகும். மனைவி என எவரையும் கொண்டிராத ஆண் களையும், கணவன் என எவரையும் கொண்டிராத பெண்களையும்தான் இந்தச் சொல் குறிக்கும். இதனால் தான் இங்கு இதனை 'வாழ்க்கைத் துணை யின்றி இருப்பவர்கள்' என மொழிபெயர்க்கப் பட்டுள்ளது.*

51. *அதாவது உங்களுடன் அவர்களின் நடத்தையும் நன்றாக இருப்பதோடு மணவாழ்வில் ஈடுபடுகின்ற பக்குவமும் திறனும் கொண்டவர்களாகவும் இருக்க வேண்டும். ஓர் அடிமையோ அல்லது அடிமைப் பெண்ணோ தன்னுடைய எஜமானனுடன் நல்ல முறையில் நடந்துகொள்வதும் இல்லை; மண வாழ்வில் ஈடுபடுகின்ற மனப்பக்குவம் கொண்டவர்களாயும் இல்லை எனில் அந்த அடிமையையோ, அடிமைப் பெண்ணையோ மணம் முடித்து வைக்கின்ற பொறுப்பு எஜமானனுக்கு இல்லை. ஏனெனில் அத்தகைய நிலை யில் இன்னொரு மனிதரின் வாழ்வைக் கெடுக்கின்ற செயலாய் அந்தத் திருமணம் ஆகிவிடும்.*

52. *இது உத்தரவு பாணியில் சொல்லப்பட்டிருப் பதைப் பார்த்து அறிஞர்களின் ஒரு குழுவினர் 'இது கட் டாயமாகச் செய்ய வேண்டிய பணி' என இதற்குப் பொருள் கொண்டுள்ளனர். இத்தனைக்கும் இந்த விவ காரத்தின் தன்மையைக் கருத்தில் கொண்டு பார்க்கும் போது கட்டாயமாக மேற்கொள்ளப்பட்டே ஆக வேண் டிய கட்டளையின் பொருளில் இந்த ஆணை இல்லை என்பது தெரியும். அதற்கு மாறாக இதனை ஒரு பரிந் துரையாகத்தான் எடுத்துக்கொள்ள வேண்டும். (பெரும் பான்மையான அறிஞர்கள் இந்த நிலைப்பாட்டைத்தான் எடுத்துள்ளார்கள்) அதாவது சமூகத்தில் எந்தவொரு தனி மனிதரும் மணமாகாத நிலையில் தேங்கிப் போய்விடக் கூடாது என்கிற கவலை பொதுவாக அனைவரிடமும் இருக்க வேண்டும். குடும்பத்து உறவினர்கள், சொந்த பந்தங்கள், நண்பர்கள், அண்டைவீட்டுக்காரர்கள் ஆகிய அனைவருமே இந்த விஷயத்தில் அக்கறை செலுத்த வேண்டும். இவ்வாறு இந்த விவகாரத்தில் அக்கறை செலுத்துகின்றவர்கள் எவருமே இல்லாமல் போவார் களேயானால் அவருக்கு அரசாங்கம் உதவ வேண்டும் என்றுதான் இதற்குப் பொருள்.*

53. *எவரெல்லாம் மணம் முடித்துக்கொள்கின்றார் களோ அவர்களை இறைவன் பணக்காரர்களாய் ஆக்கிவிடு வான் என்று இதற்குப் பொருள் அல்ல. அதற்கு மாறாக, இந்த விவகாரத்தில் மக்கள் அதிகமாக கணக்கு வழக்கு பார்ப்பவர்களாய் முடங்கி நின்றுவிடக்கூடாது என்பது தான் இந்த இறைவாக்கின் நோக்கம். பெண்ணைப் பெற்றவர்களுக்கும் இதில் வழிகாட்டுதல் இருக்கின்றது. நல்லியல்பும் கண்ணியமும் கொண்ட மனிதர் பெண் கேட்டு வந்தால் அவருடைய வறுமையை மட்டுமே பார்த்து அவருடைய விண்ணப்பத்தை நிராகரித்துவிட வேண்டாம் என்கிற வழிகாட்டுதல் பெண்ணைப் பெற்ற வர்களுக்குத் தரப்பட்டிருக்கின்றது.*

*மகனைப் பெற்றவர்களுக்கும் இதில் செய்தி இருக் கின்றது. பையன் இன்னும் நாலு காசு சம்பாதிக்கட்டும் என்கிற எதிர்பார்ப்பில் அவனுக்குத் திருமணம் செய்து வைக்காமல் தள்ளிப்போடாதீர்கள் என்கிற செய்தி. இளைஞர்களுக்கும் இதில் வழிகாட்டுதல் இருக்கின்றது. வளமாக வாழ வேண்டுமே என்கிற எதிர்பார்ப்பில் திருமணத்தைத் தள்ளிப்போடாதீர்கள்; சம்பாத்தியம்*

**31 ஆம் பக்கம் பார்க்க...**

**அத்தியாயம் : 24 அந்நூர்**
**(மதீனாவில் அருளப்பட்டது)**
**திருவசனங்கள் : 32-33**

**தஃப்ஹீமுல் குர்ஆன்**
**• மௌலானா மௌதூதி (ரஹ்)**
**தமிழில் : T. அஜீஸ் லுத்ஃபுல்லாஹ்**

# வரிசைகள் கோணலானால் உள்ளங்கள் பிளவுபடும்!

***ஆயிஷா(ரலி) அறிவிக்கின்றார்: அண்ணல் நபிகளார் (ஸல்) கூறினார்கள்: 'மக்களிடம் அவர்களின் தகுதிநிலைக்கேற்ப நடந்து கொள்ளுங்கள்'. (நூல் : அபூதாவூத்)***

மனிதர்கள் ஒவ்வொருவரும் தமக்கெனத் தனி தகுதிநிலையைக் கொண்டிருக்கின்றார்கள் என்பதை இந்த நபிமொழி உணர்த்துகின்றது.

ஒவ்வொருவரிடமும் அவரவரின் தகுதிநிலையைக் கருத்தில் கொண்டு நடப்பது நம் மீது கடமையாகும். ஒருவருக்கு இல்லாத தகுதிநிலையில் அவரை அமர்த்தி அவரை வானளாவத் தூக்கிவிடவும் கூடாது. ஒருவரின் தகுதிநிலையை முற்றாக ஒதுக்கித்தள்ளி அவரிடம் அவருக்குரிய மரியாதையை அளிக்காமல் நடக்கவும் கூடாது.

அறிவாற்றல், மார்க்க அறிவு போன்ற சிறப்புகளுக்கும் பிற ஆகுமான சிறப்புகளுக்கும் மதிப்பளிப்பது அவசியம் ஆகும். இன்னும் சொல்லப்போனால் ஒருவர் நம்மை விட வயதில் மூத்தவராக இருக்கின்றார் எனில் அதற்குரிய மரியாதையைக் கொடுப்பதும் அவசியம் ஆகும். பொதுவாக உலக மோகத்தில் ஊறித் திளைக்கின்ற மக்களில் பலரும் வெறுமனே செல்வச் செழிப்பை மட்டுமே மரியாதை செலுத்துவதற்கான அளவுகோலாகக் கொள்கின்றனர். இது சரியல்ல.

இறைக்கட்டளைகளை வலிந்து மீறுகின்ற, தான் தோன்றித்தனமாக நடக்கின்ற, மனஇச்சைகளுக்கு அடிபணிந்து வாழ்கின்ற செல்வந்தரைவிட இறைவனின் கட்டளைகளின்படி வாழ்கின்ற மார்க்கத்தைப் பற்றிய ஞானம் அருளப்பெற்ற ஏழைதான் மதிப்புக்கும் மரியாதைக்கும் உரியவர் ஆவார். மார்க்கம், இறையச்சம் ஆகியவற்றுக்கு முன்னால் செல்வச் செழிப்புக்கும் பணத்திற்கும் எந்த மதிப்பும் இல்லை. யார் இறைவனுக்கு அஞ்சி இறைவன் விதித்த வரம்புகளுக்கு உட்பட்டு பேணுதலுடன் வாழ்கின்றார்களோ அவர்கள்தாம் இறைவனின் பார்வையில் உயர்ந்தவர்கள். சிறந்தவர்கள் ஆவர்.

உலகவளங்களும் செல்வச் செழிப்பும் காரூனிடம் அதிகமாகக் கொட்டிக் கிடந்தன. ஆனால் அவன் இறைக் கட்டளைகளை மீறி நடந்ததற்காக இறைவன் அவனைப் பிடித்தபோது அவனுடைய உலக வளங்கள், செல்வச் செழிப்பு ஆகிய எதுவுமே அவனுக்குப் பயன் அளிக்கவில்லை. அவன் அழிந்து நாசமாகிப் போனான்.

***அபூ ஸயீத் அன்சாரி(ரலி) அறிவிக்கின்றார்: அண்ணல் நபிகளார் (ஸல்) தொழுகைக்காக (வரிசைகளை ஒழுங்குபடுத்துவதற்காக) எங்களுடைய தோள்களைத் தடவி (அவை சமமாக இருக்கின்றனவா என்று சரி) பார்ப்பார்கள். மேலும் கூறுவார்கள்:***

***'நேராக நில்லுங்கள். (பிளவுபட்டும் இடைவெளி விட்டும் முன்பின்னாக) ஒழுங்கற்ற முறையிலும் சீரற்றும் நிற்காதீர்கள். இல்லையேல் உங்களின் இதயங்களும் வேறுபட்டு விடும்.[1] உங்களில் அறிவாற்றலும் செயற்செம்மையும் மிக்கவர்கள் எனக்கு அருகில் நிற்கட்டும். பிறகு அவர்களுக்கு அருகில் இருப்பவர்களும் பிறகு அவர்களுக்கு அருகில் இருப்பவர்களும் நிற்கட்டும்'[2]. நூல் : முஸ்லிம் (739)***

*1.* அதாவது நேராக, சீராக, சமமாக நில்லுங்கள். வரிசைகள் கோணலாக, தாறுமாறாக இருத்தல் கூடாது. இல்லையேல் உங்களுடைய உள்ளங்களிலும் பிளவுகள் ஏற்பட்டு விடும். வெளியில் தென்படும் மேம்போக்கான வேறுபாடுகளும் பிளவுகளும் காலப்போக்கில் உள்ளங்களிலும் குழப்பத்தையும் இடைவெளிகளையும் ஏற்படுத்திவிடும். உங்களுக்குள் எந்தவிதமான முரண்பாடுகளோ, கருத்துவேறுபாடுகளோ இல்லாமல் போனாலும் வெளியில் தென்படுகின்ற இந்த மேம்போக்கான பிளவுகளையும் சீர்குலைவையும் கண்டு கொள்ளாமல் அவற்றை அப்படியே நீடித்து வைப்பீர்களாயின் நிச்சயமாக அதன் பாதிப்புகள் உள்ளங்களிலும் எதிரொலிக்கும். உங்களுடைய உள்ளங்களும் ஒன்றுக்கொன்று முரண்பட்டும் வேறுபட்டும் போகும். அதன் பிறகு மார்க்கத்தில் பெரிதும் விரும்பப்படுகின்ற ஒரு மித்த சிந்தனையும் இணக்கமும் ஒற்றுமையும் உங்களுக்கிடையில் நிலைத்து நிற்காது.

*2.* அறிவாற்றலுக்கும் செயற்செம்மைக்கும் மார்க்கத்தில் அதிகமான முக்கியத்துவம் தரப்பட்டிருக்கின்றது என்பது இதிலிருந்து தெரிகின்றது. ஒருவர் எந்த அளவுக்கு அறிவும் தெளிவும் பெற்றிருக்கின்றாரோ அந்த அளவுக்கு மார்க்க விழிப்பு உணர்வும் பெற்றிருப்பார். எனவே இறைத்தூதருக்கு மிக அருகில் இடத்தைப் பெறுவதற்கு மற்றவர்களை விட அவருக்கே அதிக தகுதி உண்டு.

★ மௌலானா முஹம்மத் பாரூக்கான் ★ தமிழில் : அபூ ஹானியா ★ நூல் : கலாமே நுபுவ்வத்

*28 ஆம் பக்கத் தொடர்ச்சி...*

*குறைவாக இருக்கின்ற நிலையிலும் அல்லாஹ்வின் மீது பாரத்தைப் போட்டுவிட்டு மணம் முடித்துக் கொள்ளுங்கள் என்கிற செய்தி.*

54. இது தொடர்பாக நபிமொழி நூல்களில் பதிவாகியிருக்கின்ற அண்ணல் நபிகளாரின் அமுத வாக்குகளே இந்த வசனத்திற்கான சிறப்பான விளக்கவுரையாய் இருக்கின்றன. அப்துல்லாஹ் பின் மஸ்ஊத்(ரலி) அறிவிக்கின்றார். அண்ணல் நபிகளார்(ஸல்) கூறினார்: 'இளைஞர்களே. உங்களில் மணம் முடிக்கின்ற சக்தி பெற்றவர்கள் மணம் முடித்துக் கொள்ள வேண்டும். ஏனெனில் பார்வைகளைப் பாதுகாத்துக்கொள்வதற்கும் கண்ணியத்தை நிலைநிறுத்திக்கொள்வதற்கும் இதுதான் சிறப்பான வழிமுறை ஆகும். எவருக்கு இந்த சக்தி இல்லையோ அவர் நோன்பு நோற்கட்டும். ஏனெனில் நோன்பு மனிதனின் உணர்வுகளைத் தணிக்கும்' (புகாரி, முஸ்லிம்)

அபூஹுரைரா(ரலி) அறிவிக்கின்றார்: அண்ணல் நபிகளார்(ஸல்) கூறினார்: 'மூன்று வகையான மனிதர்களுக்கு உதவுவது இறைவன் மீது கடமையாகும். தூய்மையான ஒழுக்கத்தைப் பேணுகின்ற நோக்கத்துடன் மணம் முடிக்கின்ற இளைஞன். பெற்ற கடனைத் திருப்பிச் செலுத்துவதாக எழுதிக் கொடுத்த பிறகு அதனைத் திருப்பித் தந்தாக வேண்டும் என்கிற வாய்மையான எண்ணத்துடன் செயலாற்றுகின்றவர். இறைவழியில் ஜிஹாத் செய்வதற்காகக் கிளம்பியவர்.' (திர்மிதி, நஸாயீ, இப்னு மாஜா, அஹ்மத்) (கூடுதல் விளக்கங்களுக்காகப் பார்க்க அத்தியாயம் 4 அன்னிஸா வசனம் 25)

55. முகாத்தபத் என்கிற சொல்லுக்கு இரு தரப்பினரும் சேர்ந்து மனம் ஒப்பி எழுதுதல் என்று பொருள். என்றாலும் அடிமையோ, அடிமைப்பெண்ணோ தன்னுடைய விடுதலைக்காக தனது எஜமானனிடம் இத்துணை பணமோ பொருளோ தருவதாக வாக்குறுதி கொடுப்பதாகவும் அவருடைய அந்த விண்ணப்பத்தை அவருடைய எஜமானன் ஏற்றுக்கொள்வதாகவும் இரு தரப்பினருக்கும் இடையில் இது தொடர்பான நிபந்தனைகள் அனைத்தும் முறையாக எழுதி வைத்துக்கொள்வதைக் குறிப்பதற்கே இந்தச் சொல் ஆளப்படுகின்றது. எஜமானனிடமிருந்து அடிமை இன்னின்ன வகைகள் மூலமாக விடுதலை பெறுவது கூடும் என்று இஸ்லாம் அடையாளம் காட்டியிருக்கின்றது. அவற்றில் ஒரு வகைதான் இவ்வாறு நிபந்தனைகளை எழுதி வைத்துக் கொள்வதும்.

56. அடிமையோ, அடிமைப்பெண்ணோ இவ்வாறு தம் எஜமானனிடம் தம்முடைய விடுதலைக்காக முகாத்தபத் கோரினால் அவர்களின் அந்தக் கோரிக்கையை ஏற்றுக்கொள்வதும் அவர்களுடன் முகாத்தபத் செய்து கொள்வதும் எஜமானன் மீது கடமை என்று இந்த வசனத்திற்கு அறிஞர்கள் சிலர் பொருள் கொண்டுள்ளார்கள். இல்லை. அவர்களுடன் முகாத்தபத் செய்தே தீர வேண்டும் எனக் கட்டாயப்படுத்துகின்ற ஆணையாக இதனை எடுத்துக்கொள்ள முடியாது. இது விரும்பத்தக்கது என்கிற அளவிலும் ஒரு பரிந்துரை என்கிற வகையிலும்தாம் இதனை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று அறிஞர்களில் இன்னொரு சாரார் இதற்குப் பொருள் கொண்டுள்ளார்கள்.

மூலத்தில் 'காத்திபுஹும்' (அவர்களுடன் முகாத்தபத் செய்துகொள்ளுங்கள்) என்கிற சொல் ஆளப்பட்டுள்ளது. இதில் கட்டளையிடுகின்ற தொனி இருக்கின்றது. இறைவனின் ஆணைதான் இது என்பதற்கு இந்தச் சொல்லே சான்று என முதலாமவர்கள் வாதிடுகின்றார்கள். 'இல்லை. இறைவன் 'காதிபுஹும்' என்று சொன்னதோடு நின்றுவிடவில்லை. கூடவே 'இன் அலிம்தும் ஃபஹிம் கைரான்' (அவர்களிடம் நன்மை இருப்பதாக நீங்கள் அறிந்தால்) என்கிற வாசகங்களையும் சேர்த்துதான் 'முகாத்தபத் செய்து கொள்ளுங்கள்' எனச் சொல்லி இருக்கின்றான். ஓர் அடிமையிடமோ அடிமைப்பெண்ணிடமோ நன்மை இருக்கின்றதா, இல்லையா என்பது எஜமானனின் எண்ணத்தைப் பொருத்தே தீர்மானம் ஆகும். மேலும் அந்த 'நன்மையை' நீதிமன்றத்தில் வரையறுக்கின்ற அளவுக்கு அதற்கு எந்த அளவுகோலும் இல்லை என்பதும் உண்மை. சட்டங்கள் இப்படி தெளிவில்லாமல் இருக்கலாகாது. எனவே இந்த வசனத்தை 'அறிவுறுத்தலாக' 'பரிந்துரையாக'த்தான் எடுத்துக்கொள்ள வேண்டுமே தவிர அனைவரையும் கட்டுப்படுத்துகின்ற ஆணையாக எடுத்துக்கொள்ளக்கூடாது என்பது இரண்டாமவர்கள் முன்வைக்கின்ற வாதம் ஆகும்.

57. இங்கு 'நன்மை' என்பது மூன்று விஷயங்களைக் குறிக்கும். 1) முதலாவதாக அந்த அடிமையிடம் முகாத்தபத்துக்குரிய நிபந்தனைகளை நிறைவேற்றுகின்ற சக்தியும் வலிமையும் இருக்க வேண்டும். உழைத்து சம்பாதித்தும் வணிகம் செய்து பொருளீட்டியும் தனது முகாத்தபத்துக்கான பணத்தைச் செலுத்துகின்ற அளவுக்கு அவர் சக்தியும் திறனும் பெற்றிருக்க வேண்டும். 2) அவருடைய வாக்குறுதியை ஏற்று அவருடன் ஒப்பந்தம் செய்துகொள்கின்ற அளவுக்கு நேர்மையும் வாய்மையும் கொண்டவராய் அவர் இருத்தல் வேண்டும். 3) அவரிடம் தீய ஒழுக்கங்களோ, தீய நடத்தையோ அல்லது இஸ்லாத்துக்கும் முஸ்லிம்களுக்கும் எதிரான பகை உணர்வுகளோ கசப்பு உணர்வுகளோ இல்லை என்பதில் எஜமானனுக்கு மன நிறைவு இருக்க வேண்டும். அவரை விடுதலை செய்துவிட்ட பிறகு அவருடைய அந்த விடுதலையே முஸ்லிம் சமூகத்துக்கு ஊறு விளைவிப்பதாய் அமைந்துவிடுமோ என்கிற அச்சுறுத்தல் அளிப்பதாய் அவருடைய நடத்தை இருக்கக்கூடாது.

இவ்வாறு ஒப்பந்தம் செய்துகொண்டு விடுவிக்கின்ற இந்த விதி போர்க் காலங்களில் கைவசமான அடிமைகளுக்கும் பொருந்தும் என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும். அதனால்தான் இந்த அளவுக்கு முன்னெச்சரிக்கையுடன் இதனை அணுக வேண்டியது அவசியமாயிற்று.

# எதற்கு முன்னுரிமை?

# எளிமைக்கா? சிரமத்திற்கா?

• மௌலவி நூஹ் மஹ்ழரி

அழைப்பியல் துறையாக இருந்தாலும் சரி, ஃபத்வா எனும் மார்க்கத் தீர்ப்பு வழங்கும் துறையாக இருந்தாலும் சரி சிரமத்தைவிட இலகுவுக்கே முன்னுரிமை கொடுக்க வேண்டும். அல்குர்ஆனும், ஸுன்னாவும் அறிவிக்கும் ஒரே செய்தி இதுதான்: இலகுவையே அல்லாஹ் விரும்புகின்றான்.

அல்லாஹ் கூறுகின்றான்: ''அல்லாஹ் உங்களுக்கு இலகுவை விரும்புகின்றான்'' *(2:185)*

''அல்லாஹ் உங்கள் மீதுள்ள கட்டுப்பாடுகளைத் தளர்த்த விரும்புகின்றான். ஏனென்றால், மனிதன் பலவீனனாகப் படைக்கப்பட்டுள்ளான்'' *(4:28)*

''உங்கள் வாழ்க்கையில் எந்தச் சிரமத்தையும் உண்டு பண்ண அல்லாஹ் விரும்பவில்லை''*(5:6)*

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ''இலகுவே உங்களுக்கான மிகச் சிறந்த மார்க்கம்'' (அஹ்மத், தபரானி, புகாரி-அதபுல் முஃப்ரத்)

ஆயிஷா (ரலி) அறிவிக்கின்றார்: ''ஏதாவது ஒரு விவகாரத்தில் தேர்ந்தெடுக்கும் உரிமை கொடுக்கப்பட்டால் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இலகுவையே தேர்ந்தெடுப்பார்கள் - அது தீமையாக இல்லாதிருந்தால். தீமையாக இருந்தால் மிக வேகமாக அதனைத் தவிர்ந்து கொள்வார்கள்.'' (புகாரி, முஸ்லிம்)

ஜாபிர் (ரலி) அறிவிக்கின்றார்: நபி (ஸல்) அவர்கள் ஒரு பயணத்தில் இருந்தார்கள். அப்போது ஒரு மனிதருக்கு முன் சிலர் கூடி நின்று நிழல் ஏற்படுத்திக் கொடுத்துக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். ''என்ன இது'' என்று நபி (ஸல்) அவர்கள் கேட்க, ''அவர் நோன்பு வைத்திருக்கின்றார், அல்லாஹ்வின் தூதரே'' என்று மக்கள் கூறினர். அண்ணலார் கூறினார்கள்: ''பயணத்தில் நோன்பு வைப்பது நன்மை தரும் செயல் அல்ல'' (புகாரி, முஸ்லிம்)

பயணத்தில் சிரமம் இல்லையெனில் நோன்பு வைப்பதில் தவறில்லை, எனினும் அல்லாஹ்வே இலகுவைத் தந்திருக்கும்போது நாமாக ஏன் சிரமங்களை எடுத்துக் கொள்ள வேண்டும்? நாமாக ஏன் அல்லாஹ் தந்த இலகுவை விட்டு விடவேண்டும்?

நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள்: ''தனக்கு மாறு செய்வதை அல்லாஹ் வெறுப்பதைப் போன்றே, அவன் வழங்கிய இலகுவை நடைமுறைப்படுத்துவதை அல்லாஹ் விரும்புகின்றான்.'' (அஹ்மத், இப்னு ஹிப்பான், பைஹகீ)

அபூ மூஸா அல்அஷ்அரி (ரலி) அவர்களையும் முஆத் பின் ஜபல் (ரலி) அவர்களையும் யமன் நாட்டிற்கு அனுப்பும்போது நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு அறிவுரை கூறினார்கள்: ''விஷயங்களை எளிதாக்குங்கள். சிரமப்படுத்தி விடாதீர்கள். சுபச்செய்தி கூறுங்கள், வெறுப்படையச் செய்யாதீர்கள்'' (புகாரி, முஸ்லிம்)

## இஸ்லாத்தைத் தழுவுபவர்களிடம்...

வாழையடி வாழையாக முஸ்லிம்களாக வாழும் மக்களுக்குக் கூறப்படும் சட்ட திட்டங்களை அப்படியே அடிபிறழாமல் புதிதாக இஸ்லாத்தை ஏற்றவரிடமும் கடைப்பிடிக்குமாறு கூற முடியாது, கூறவும் கூடாது. அவருக்கு முதலில் இலகுவான விவகாரங்களையே கற்றுக்கொடுக்க வேண்டும். எல்லா கட்டளைகளையும் எல்லா விலக்கல்களையும் முதலிலேயே கற்றுக் கொடுத்தால் அவருக்கு சிரமமாகி விடும்.

அடிப்படை விஷயங்களை முதலில் கற்றுக் கொடுக்க வேண்டும். பின்னரே மற்ற விவகாரங்கள் குறித்துச் சொல்லிக் கொடுக்க வேண்டும். நபி (ஸல்) அவர்களின் பாணி இவ்வாறுதான் இருந்துள்ளது.

புதிதாக இஸ்லாத்தை ஏற்க முன்வருபவருக்கு இஸ்லாத்தின் அடிப்படைகளைக் கற்றுக் கொடுத்த பின், கட்டாயக் கடமைகளை மட்டும் சொல்லிக் கொடுப்பார்கள். உபரி வணக்கங்களைக் குறித்துக் கூறி அவரைத் திணறடிக்க மாட்டார்கள். அவ்வாறு கற்றுக்கொடுக்கப்பட்டவர், ''இதில் எதையும் நான் கூட்டவும் மாட்டேன், குறைக்கவும் மாட்டேன்'' என்று கூறினால், நபி (ஸல்)

அவர்கள், ''இவர் வெற்றி பெற்றுவிட்டார்'', என்றோ அல்லது ''இவர் உண்மை கூறியிருந்தால் சுவனத்தில் நுழைந்து விடுவார்'' என்றோ பதில் கூறுவார்கள்.

இந்த அகப்பார்வைதான் இன்று நமக்குத் தேவை. மக்களின் நிலைமை புரியாமல் சிரமம் தரும் இமாம்கள் மீது நபி (ஸல்) அவர்களின் கோபம் பாய்ந்துள்ளது. மக்களைக் குறித்துக் கவலை கொள்ளாமல் நீண்ட நேரம் தொழுகை நடத்திய நபித்தோழர்கள் மீது பெருமானார் (ஸல்) கோபம் கொண்டுள்ளார்கள்.

முஆத் பின் ஜபல் (ரலி) நீண்ட நேரம் தொழுகை நடத்தியதால் மக்களில் சிலர் சிரமத்திற்கு உள்ளாவது குறித்து பெருமானாருக்கு செய்தி வந்தது. முஆதை (ரலி) அழைத்து நபி (ஸல்) அவர்கள், ''முஆதே! மக்களிடையே குழப்பத்தை ஏற்படுத்துகின்றீரா நீர்?, முஆதே! மக்களிடையே குழப்பத்தை ஏற்படுத்துகின்றீரா நீர்?, முஆதே! மக்களிடையே குழப்பத்தை ஏற்படுத்துகின்றீரா நீர்?'' என்று மூன்று முறை கோபத்துடன் கேட்டார்கள். (புகாரி)

அபூ மஸ்ஊத் அல்அன்ஸாரி (ரலி) அறிவிக்கின்றார்: ஒரு நபித்தோழர் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்து இவ்வாறு கூறினார்: ''அல்லாஹ்வின் தூதரே! இன்ன மனிதரின் காரணத்தால் நான் அதிகாலை (ஸுபுஹ்) தொழுகைக்குத் தாமதமாக வருகின்றேன். அவர் நீண்ட நேரம் தொழ வைக்கின்றார்''. அபூ மஸ்ஊத் (ரலி) கூறுகின்றார்: அன்றைய தினத்தைவிட அதிகமாக நபி (ஸல்) அவர்கள் கோபப்பட்டு நான் பார்த்ததே இல்லை. அறிவுரை செய்யும்போது கடுமையான கோபத்துடன் கூறினார்கள்: ''உங்களில் சிலர் தொழுகைக்கு வருபவர்களை விரட்டுகின்றார்கள். உங்களில் எவராவது தொழ வைத்தால் இலகுவாக்குங்கள். ஏனெனில், பின்னால் நின்று தொழுபவர்களில் பலவீனமானவர்களும், முதியோர்களும், தேவை உடையவர்களும் இருக்கின்றார்கள்'' (புகாரி, முஸ்லிம்)

நபி (ஸல்) அவர்களின் பணியாளரும் தோழருமான அனஸ் (ரலி) அறிவிக்கின்றார்: பெருமானார் (ஸல்) அவர்களைவிட தொழுகையை இலகுபடுத்தும் எந்த ஓர் இமாமுக்கும் பின்னால் நின்று நான் தொழுததே இல்லை. குழந்தையின் அழுகையைக் கேட்டால், அக்குழந்தையின் தாயாருக்குச் சிரமம் ஏற்பட்டு விடுமோ என்ற அச்சத்தால் தொழுகையை விரைவில் முடித்துக் கொள்வார்கள். (புகாரி, முஸ்லிம்)

### மார்க்கத்தைப் பின்பற்றுவதில் சிரமம் ஏன்?

மார்க்கத்தை நாம்தான் சிரமமாக்கினோம். அளவுக்கு மீறிய சுமைகளை நாம் நம் மீதே சுமத்தினோம். எதற்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டுமோ அதற்கு முக்கியத்துவம் கொடுக்காமல், எதற்குக் கொடுக்கக் கூடாதோ அதற்கு முக்க்கியத்துவம் கொடுத்துவிட்டோம். எனவேதான் நம்மில் பலருக்கு தீன் என்பது ஒரு சுமையாக மாறிவிட்டது. இன்றைய கால கட்டத்திற்கு ஒத்துவராது என்று சிலர் சாக்குப்போக்கு சொல்வதும் இதனால்தான்.

நபி (ஸல்) அவர்கள் காலத்திலேயே மூன்று நபித்தோழர்கள் தங்களுக்குத் தாங்களே இதுபோன்ற சுமையை தங்கள் மீது சுமத்த முன் வந்தபோது அவர்களை நபி (ஸல்) அவர்கள் கடிந்து கொண்டதும், எனது வழிமுறையை யார் புறக்கணிக்கின்றாரோ அவர் என்னைச் சார்ந்தவர் அல்லர் என்று கூறியதும் எல்லாரும் அறிந்த செய்தி.

பெருமானார் (ஸல்) அவர்களின் வணக்க வழிபாடுகளை அறிந்த அவர்கள், முன்பின் பாவங்கள் மன்னிக்கப்பட்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களே இவ்வளவு தூரம் இறைவனை வணங்குகின்றார். நாம் எங்கே...? என்று கூறி, அவர்களில் ஒருவர் கூறினார்: ''இனிவரும் இரவுகளில் ஒரு நாளும் நான் தூங்கமாட்டேன், இறை வணக்கத்திலேயே கழிப்பேன்.''

இரண்டாமவர் கூறினார்: ''பகல் பொழுதுகளில் விடாமல் நோன்பு நோற்பேன்.''

மூன்றாமவர் கூறினார்: ''பெண்களை ஏறெடுத்தும் பார்க்க மாட்டேன். ஒருநாளும் திருமணம் செய்ய மாட்டேன்.''

இந்தச் செய்தியை அறிந்த இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அம்மூவரிடமும் கூறினார்கள்: ''இறைவன் மீது ஆணை! உங்களிலேயே அல்லாஹ்வை அதிகம் அஞ்சுபவனும், அடிபணிபவனும் நான் தான். ஆயினும் நான் சில நாள்கள் நோன்பு வைக்கின்றேன், சில நாள்கள் விட்டுவிடுகின்றேன். இரவு வணக்கத்தில் ஈடுபடுகின்றேன், தூங்குகின்றேன். பெண்களைத் திருமணம் செய்திருக்கின்றேன். எனது வழிமுறையை யார் புறக்கணிக்கின்றாரோ அவர் என்னைச் சார்ந்தவர் அல்லர்.'' (புகாரி, முஸ்லிம்)

> **எப்போதும் ஒரே மாதிரியான சட்டம், எந்நிலையிலும் மாறாத சட்டம் என்று சட்டம் பேசிக் கொண்டிருந்தால் அது மக்களுக்கு சிரமத்தையே ஏற்படுத்தும்**

எங்கு கடுமை தேவைப்படுகின்றதோ அங்கு மட்டுமே கடுமையாக நடந்து கொள்ள வேண்டும். எல்லா இடங்களிலும் கடுமையாக நடந்து கொண்டால், தீன் என்பதே கடுமைதானோ என்ற எண்ணம் மக்கள் மனதில் தோன்றிவிடாதா..?

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அறிவிக்கின்றார்: ''தேவை இல்லாமல் கடுமையாக நடந்து கொள்பவர்களுக்கு நாசம்'' என மூன்று முறை கூறினார்கள். (முஸ்லிம்)

மேலும் நபி (ஸல்) அவர்கள் அறிவிப்பதாக அபூ ஹுரைரா (ரலி) அறிவிக்கின்றார்: ''இந்த மார்க்கம் இலகு

வானது. இதனைக் கடுமையாக்க எவராவது முயன்றால், அது அவரைக் கண்டிப்பாக மிகைத்துவிடும்'' (புகாரி, நஸாயீ)

## சூழ்நிலைகளைக் கவனித்தல்

இஸ்லாமிய வரலாற்றில் இக்கட்டான நிலை எப்போதெல்லாம் ஏற்பட்டிருக்கின்றதோ அப்போதெல்லாம் அவசியத் தேவையைக் கருதி சட்டங்கள் தளர்த்தப்பட்டிருக்கின்றன.

எப்போதும் ஒரே மாதிரியான சட்டம், எந்நிலையிலும் மாறாத சட்டம் என்று சட்டம் பேசிக் கொண்டிருந்தால் அது மக்களுக்கு சிரமத்தையே ஏற்படுத்தும்.

உணவு, உடை, பானம், ஒப்பந்தங்கள், கொடுக்கல் வாங்கல்கள் ஆகியவற்றில் இஸ்லாம் எவ்வாறு சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு விட்டுக் கொடுத்துள்ளது என்பதற்கு ஏராளமான எடுத்துக்காட்டுகளை இஸ்லாமிய வரலாற்றில் நம்மால் காண முடியும்.

காலம் காலமாக ஒருசிலர் தவறுகளையே செய்து வருகின்றார்கள் என்றால், அவர்களிடம் வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்ற ரீதியில் பேசினால் என்ன நடக்கும்? வெறுப்பும் குழப்பமும்தான் ஏற்படும். புரிய வைக்க வேண்டும், விட்டுப்பிடிக்க வேண்டும், சந்தர்ப்பம் கொடுக்க வேண்டும், சூழ்நிலையைக் கவனிக்க வேண்டும். இக்கட்டான சூழ்நிலையில் ஷரீஅத்தின் சட்டத்தையே அல்குர்ஆன் தளர்த்தியுள்ளது.

செத்த பிராணியும், பன்றி இறைச்சியும், அல்லாஹ்வின் பெயர் கூறி அறுக்கப்படாதவையும் தடுக்கப்பட்டவை அல்லவா? ஹராம் அல்லவா..? சாப்பிடலாமா? ஒருபோதும் கூடாது என்றுதானே அல்குர்ஆன் கூறுகின்றது. ஆனால், கட்டாயத்திற்கு உள்ளானாலோ, உயிரைப் பாதுகாக்க வேண்டும் என்றாலோ சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு இவற்றை வரம்பு மீறாமல் பயன்படுத்துவதற்கு இஸ்லாம் அனுமதி வழங்கி உள்ளது.

''செத்த பிராணியும், இரத்தமும், பன்றி இறைச்சியும், அல்லாஹ்வைத் தவிர மற்றவரின் பெயர் கூறி அறுக்கப்பட்டவையுமே உங்களுக்குத் தடுக்கப்பட்டவை யாகும். எனினும், எவரேனும் ஒருவர் (இப்பொருள்களில் ஏதாவதொன்றைப் புசிக்க வேண்டிய) கட்டாயத்திற்குள்ளானால், இறைச்சட்டத்தைத் தகர்க்கும் நோக்கமில்லாமலும், வரம்பு மீறாமலும் (தேவைக்கு மிகாமலும்) அதனைப் புசிப்பதில் அவர் மீது குற்றமில்லை. நிச்சயமாக அல்லாஹ் மன்னிப்பு வழங்குபவனாகவும், கருணை புரிபவனாகவும் இருக்கின்றான்.'' (அல்குர்ஆன் 2: 173)

மதீனாவிலிருந்து நபி (ஸல்) அவர்களும் தோழர்களும் உம்ரதுல் களா என்றழைக்கப்படும் உம்ரா செய்வதற்குச் சென்றார்கள். ஹரமுக்குள் கஅபாவைச் சுற்றி வலம் வரும்போது கஅபாவுக்கு உள்ளே பல சிலைகள் இருக்கத்தான் செய்தன. நபி (ஸல்) அவர்கள் ஏன் அவற்றை அப்போது அப்புறப்படுத்தவில்லை? ஏனெனில், சூழ்நிலை இணக்கமானதாக இருக்கவில்லை. அப்போது நீக்கம் செய்திருந்தால் பெரும் குழப்பமும், பிரச்னைகளும்தான் ஏற்பட்டிருக்கும். மக்கா வெற்றிக்குப் பின்புதான் அச்சிலைகள் அகற்றப்பட்டன.

பட்டு ஆடை ஆண்களுக்கு ஹராம் அல்லவா? ஆனால், அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி), ஸுபைர் (ரலி) போன்றவர்களுக்கு அதனை அணிவதற்கு நபி (ஸல்) அவர்கள் அனுமதி கொடுத்திருந்தார்களே.. ஏன்? ஏனெனில், அவ்விருவரும் சிரங்கு போன்ற ஒரு வகை நோயால் அவதிப்பட்டனர். ஆகவே அவர்களுக்கு மட்டும் அனுமதி கொடுத்தார்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள்.

பட்டு ஆடை ஹராம் என்று நான் கூறிவிட்டேன், ஆகவே யாருக்கும் அதனை அணிவதற்கு அனுமதி கிடையவே கிடையாது என்று அண்ணலார் (ஸல்) ஒரேயடியாகக் கூறவில்லை. மார்க்கச் சட்டம் இங்கே தளர்த்தப்படுகின்றது, காரணம் சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு.

## கஅபாவின் வாசல் மாற்றம் குறித்து

கஅபாவின் வாசலை மாற்ற வேண்டும் என்று நபி (ஸல்) அவர்கள் எண்ணியிருந்தார்கள். ஆனால், காலம்காலமாக மக்கள் ஒரே மாதிரியான வாசலை பார்த்துப் பழகிய காரணத்தாலும், இஸ்லாத்தைப் புதிதாக ஏற்றுள்ளதாலும் உடனடியாக மாற்றுவதை அஞ்சினார்கள். சூழல் இணக்கமாக இல்லை என்பதை நபி (ஸல்) பின்வருமாறு உணர்த்துகின்றார்கள்.

புகாரியில் பதிவு செய்யப்பட்டுள்ள நபிமொழி இது. ஆயிஷா (ரலி) அவர்களிடம் அண்ணலார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ''ஆயிஷாவே! உமது மக்கள் புதிதாக இஸ்லாத்தை ஏற்றுள்ளனர். இல்லையெனில், கஅபாவுக்கு இரண்டு வாசல்களை நான் ஆக்கியிருப்பேன். உள்ளே செல்வதற்கு ஒன்று, வெளியேறுவதற்கு மற்றொன்று''

மக்கள் என்ன நினைத்தாலும் சரி, எனக்கு சரி என்று தோன்றியதை நான் செய்வேன். சத்தியத்தைத்தானே செய்யப்போகின்றேன், ஆகவே நான் யாருக்குப் பயப்பட வேண்டும் என்று எண்ணி கஅபாவின் வாசலை அன்று மாற்றியிருந்தால் என்ன நடந்திருக்கும்? அப்போதுதான் இஸ்லாத்தை ஏற்ற நிறைய மக்கள் இந்த மாற்றத்தை ஜீரணிக்க முடியாமல் இஸ்லாத்தை விட்டே வெளியேறியிருப்பர்.

இந்த நபிமொழியைப் பதிவு செய்திருக்கும் இமாம் புகாரி அவர்கள் இதற்கு வைத்திருக்கும் தலைப்பு என்ன தெரியுமா! ''மக்கள் தவறாகப் புரிவார்கள், குழப்பம் ஏற்படும் என்பதற்காகவும், பெரும் குழப்பத்திற்கு வழி வகுக்கும் என்பதற்காகவும் செய்ய நாடிய சில செயல்களை விட்டுவிடுதல்'' என்பதாகும்.

# நவீன உலகின் பாதுகாப்புக் கவசம் ‘ஹிஜாப்’

• ஜரீனா ஜமால்

• இஸ்லாமியப் பெண்களை பர்தா அணிய வேண்டும் எனக் கட்டாயப்படுத்தி, அவர்களை இழிவு படுத்துகின்றார்கள்.

• பர்தா பெண்களின் ஆடை அணியும் சுதந்திரத்தைப் பறிக்கின்றது.

• பிற்போக்குத்தனமான பழமைவாதிகளின் ஆடை பர்தா.

• பர்தா அணிந்தவர்கள் தீவிரவாதிகள், கிளர்ச்சிக்காரிகள், அடிப்படைவாதிகள்.

பர்தா அணிந்தவர்கள் மட்டுமே மதிக்கப்படக் கூடியவர்கள் என்ற தோற்றத்தை ஏற்படுத்துவதால் அது பொதுமக்களுக்கு எதிரானது.

இவை யாவும் ஹிஜாபுக்கு எதிராகத் தொடுக்கப் படும் விமர்சனங்கள் ஆகும்.

### ஹிஜாப் ஏன்?

பெண் தன் அழகை ஆடை ஆபரணங்களால் மேலும் மெருகூட்டும் போது, அந்நிய ஆண்களின் கண்களுக்கு அது விருந்தாக்கப்படக் கூடாது; அதன் மூலம் அவளும் துன்பத்திற்குள்ளாகக்கூடாது என்பதே ஹிஜாப் அணிவதன் நோக்கம்.

### பர்தா அணியாததால் நிகழ்ந்த விபரீதங்கள்

• சில ஆண்டுகளுக்கு முன் சரிகாஷா என்ற எத்திராஜ் கல்லூரி மாணவி, ஈவ்டீசிங் மூலம் உயிரிழந்தார்.

• ஆண்களின் உணர்ச்சிகளைத் தூண்டும் வகையில் பெண்கள் உடை அணிவது, ஆண்களைக் குற்றம் செய்யத் தூண்டுகிறது என ‘பெங்களூர் இன்ஸ்டிடியூட் ஆப் பேஷன் டெக்னாலஜி’ நிறுவனம் தெரிவித்துள்ளது.

• பல்வேறு மாநிலங்களில் பெண்கள் அணியும் ஆடை குறித்து 125 கல்லூரிகளில் 20,000 மாணவர்களிடம் ஆய்வு மேற்கொள்ளப்பட்டதில் உணர்ச்சிகளைத் தூண்டும் வகையில் பெண்கள் ஆடை அணிவது நம் நாட்டில் பெருகி வரும் குற்றங்களுக்குக் காரணமாகிறது. இது ஆண்களையும் குற்றம் செய்யத் தூண்டுகிறது என்று 75% மாணவர்கள் கூறுகிறார்கள் என்று அந்த நிறுவனம் தெரிவித்துள்ளது. (ஆதாரம் : தினமலர் 2.6.2001)



கமலா சுரய்யா

• தமிழகத்தில் 9 மாதங்களில் மட்டும் 445 கற்பழிப்பு வழக்குகளும் 1614 பாலியல் வன்கொடுமை வழக்குகளும், ஆபாசமாக பேசியதாக 2422 வழக்குகளும், வரதட்சணை கொடுமை என 904 வழக்குகளும் பதிவு செய்யப்பட்டுள்ளன. (இதில் மேற்கண்ட முதல் மூன்றில் பர்தா அணிந்த பெண்கள் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.)

இந்தத் தகவலை தமிழக சமூக நலத்துறை அமைச்சர் ப.வளர்மதி சட்டப் பேரவையில் தெரிவித்தார். (ஆதாரம்: தினமணி 11.11.2011)

• பார்வதி ஷா என்ற பெண்ணை அவளின் கணவனின் சகோதரன், அண்ணியின் அழகில் மயங்கி சூழ்ச்சி செய்து அவளைக் கற்பழித்து விட்டான். இதற்குக் காரணம் பெண்கள் தங்கள் அழகை வெளிப்படுத்தியும் மறைக்க வேண்டிய பகுதிகளை மறைக்காமல் இருப்பதுமே. இது போன்ற ஆபத்துகளிலிருந்து பெண்கள் பாதுகாக்கப்பட வேண்டும் என்பதற்காகவே பர்தா கட்டாயமாக்கப்பட்டது.

• நாகரிகம், படிப்பு, சுயகட்டுப்பாடு இவையே சிறந்த தற்காப்பு; இவையிருந்தாலே போதும்; பர்தாவின் அவசியம் தேவையில்லை என்று சொல்லக் கூடிய மேலை நாடுகளில் ஒன்றான கனடா நாட்டில், ஆறு நிமிடத்திற்கு ஒரு பெண் பாலியல் பலாத்காரம் செய்யப்படுகிறாள். (ஆதாரம்: www.forumhub/expr/13422. 20393.00.27.24.hg.)

• பர்தா இல்லாத நிலையில்தான் டெல்லி மருத்துவ மாணவியின் பலாத்கார நிகழ்வு நடந்தது. இது நாடறிந்த விஷயம்.

• விஜய் டிவியின் நீயா நானா நிகழ்ச்சியில் ஆடை பற்றிய விவாதத்தில், வடநாட்டு பெண்கள் ஒப்புக் கொண்ட விஷயம் ஆடைக் குறைப்பினால் தான் பெண்கள் அதிகமாகப் பாலியல் வன்கொடுமைக்கு ஆளாக்கப்படுகின்றார்கள் என்பதாகும்.

### மூளைக்கல்ல முக்காடு!

ஆனால் பர்தாவின் மகத்துவத்தையும் உயர்வையும் உணர்ந்த இன்னொரு சாராரும் இவ்வுலகத்தில் உள்ளனர். நாணயத்திற்கு இரண்டு பக்கங்கள் போல,

பர்தாவை வெறுக்கும் கூட்டத்திற்கு மத்தியில் அதனை விரும்பி அணிபவர்களும் உண்டு என்பதற்குச் சில எடுத்துக்காட்டுகள்.

1. தென்கலிபோர்னியாவை சேர்ந்த மாணவி, பர்தா அணிதல் என்பது ஒருவரின் நெறியை பகிரங்கமாகப் பறைசாற்றுவதாகும் என்கிறாள். ''நான் ஒரு இஸ்லாமியப் பெண் என்று மக்களால் அறியப்படுகிறது. பர்தா அணியவில்லை என்றால் யாரும் கேட்கப் போவதில்லை. ஆனாலும் நன்னெறியான இஸ்லாம் பற்றிய செய்திகளை விளக்குவதற்கு வழிவகுக்கிறது. 'பர்தா அணிவதன் மூலம் எனது குணநலன்களில் சிறந்த மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன'' என்று கூறுகிறார்.

(வெஸ்டர்ன் பிரிட்ஜ் பள்ளி மாணவி, அமெரிக்காவின் லாஸ்ஏஞ்ஜெல்ஸ் டைம்ஸ் பத்திரிகையில் வெளிவந்த கட்டுரையின் ஒரு துளி இது.)

2. நொரேன் என்னும் அமெரிக்கப் பெண்மணி ''சிகாகோ டிரிபியூன்'' என்னும் பத்திரிகையில் நிருபராக வேலை பார்ப்பவர். தன் வேலை நிமித்தம் செய்திகள் சேகரிக்க வெளியே செல்லும் போது பர்தா அணிந்துதான் செல்கிறார். நவீன அமெரிக்க சூழலில் இஸ்லாமிய ஒழுக்கக் கோட்பாடுகளுக்கு ஏற்ப தன் கணவருடனும், மகளுடனும் வாழ்ந்து வருகிறார். அவர் நீச்சல், நடை பயிற்சியின் போதும், உடல் முழுவதும் மறைக்கக் கூடிய உடை உடுத்திதான் செல்கிறார். பர்தா அணிவது என்பது பெண்மையின் அனைத்துப் பண்புகளையும் பெண்களுக்கு அதிகப்படுத்துகிறது. அது பெண்மையை, ஒடுக்கும் விதமாக அமையவில்லை என்று கூறுகிறார். (ஆதாரம் : www.oprah.com)

பெண்கள் பர்தா அணிவது எந்த விதத்திலும் அவர்கள் சுதந்திரத்தைப் பாதிக்கவில்லை. அவர்கள் முன்னேற்றத்திற்கு எந்தத் தடையுமில்லை என்பதற்கு கீழ்க்காணும் உண்மை எடுத்துக்காட்டு.

ஜெர்மனி நாட்டில் 31 வயதாகிய 'பெரோஸ்டாலூடின்' என்ற முஸ்லிம் ஆசிரியை இஸ்லாமிய முறைப்படி பர்தா அணிந்து பள்ளிக்கு வருவதற்கு அனுமதி மறுக்கப்பட்டார். அதனையே காரணம் காட்டி அந்தப் பள்ளி லூடினுக்கு வேலை தரவும் மறுத்து விட்டது. ஆனாலும் லூடின் அந்த பள்ளியின் மீது வழக்கு தொடர்ந்து அதில் வெற்றியும் பெற்றுள்ளார்.

பர்தா அணிந்தால் வேலை இல்லையென்று சொன்னவுடன் பர்தாவை தூர வீசி விட்டு தனக்கு வேலைதான் முக்கியம் என்று சென்று விடாமல் பர்தாவிற்காக போராடி பர்தாவுடன் பள்ளிக்கு செல்ல அனுமதியும் வாங்கி வெற்றி பெற்று பர்தா தன் சுதந்திரத்தை பறிக்கவுமில்லை. தன் முன்னேற்றத்திற்கு தடையாகவும் இல்லை என்று கூறுகிறார். (மக்கள் உரிமை 2.7.2004)

4. மற்றுமொரு பிரபலமான பெண்மணி ஏஞ்சலா வில்லியம்ஸ் கதீஜா. இஸ்லாத்தை ஏற்ற இவர் சென்னை அமெரிக்கத் தூதரக அலுவலகத்தில் மூத்த அதிகாரியாக பணியாற்றுகிறார். பர்தா நாகரிகத்திற்காகவோ,



ஹிஜாபுடன் பெண் வீராங்கனைகள்



நியூ ஸ்காட்லாண்ட் யார்டில் இஸ்லாமிய பெண் போலீசார் பர்தாவுடன்

அழகிற்காகவோ அணியப்படுவதில்லை. பெண்களின் அழகை அந்நியரின் பார்வையிலிருந்து மறைக்க வேண்டும் என்பதற்காகவும், மற்ற முஸ்லிம் அல்லாதவர்களிலிருந்து தங்களை வேறுபடுத்திக் காட்ட வேண்டும் என்பதற்காகவும் என்று அவர் கூறுகிறார். (ஆதாரம் : சமரசம் 1-15, 2002)

5. இலண்டனில் உள்ள நியூ ஸ்காட்லாண்ட் யார்டில் இஸ்லாமிய பெண் போலீசார் பர்தா அணிந்து பணிபுரிகின்றார்கள். ஈரான், சூடான் நாடுகளிலும் பெண்கள் பர்தா அணிந்து காவல்துறையிலும் இராணுவத்திலும் கடமையாற்றுகிறார்கள்.

6. பிரபலமான மற்றுமொரு பெண்மணி கேரள நாட்டை சேர்ந்த கமலா சுரய்யா. இவர் புகழ்பெற்ற எழுத்தாளர். 1999 ஆம் ஆண்டு இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார். தான் இஸ்லாத்தை தழுவியதற்கு இரண்டு காரணங்களைக் கூறுகிறார். ஒன்று பர்தா, மற்றொன்று இஸ்லாம் பெண்களுக்கு வழங்கும் பாதுகாப்பு.

கேரள முஸ்லிம் மக்களிடையே பர்தா கலாச்சாரம் மிக வேகமாக வளர்ச்சியடைந்து வருகிறது. முன்பெல்லாம் மாதம் ஒன்றுக்கு 50 பர்தாக்கள் விற்ற கடைகளில் இப்பொழுது 200 பர்தாக்கள் வரை விற்பதாக கடைக்காரர் கூறுகிறார். (ஆதாரம் : http://us.rediff.com)

இஸ்லாத்தை அறிவுப்பூர்வமாக ஏற்றுக்கொண்ட ஏஞ்சலா வில்லியம்ஸ் கதீஜத், 'பர்தா அணிவதால் புழுக்கமாக இருக்கும். பாராபட்சத்திற்குள்ளாவோம் என்பதை எல்லாம் ஏற்றுக் கொள்ள முடியாது. என்னை பொறுத்தவரை பர்தா அணிவதால் என் உடலில் துளிர்க்கும் ஒவ்வொரு வேர்வை துளிகளுக்குப் பகரமாகவும் நான் சகித்துக் கொள்ளும் அசௌகரியங்களுக்கு பதிலாகவும் பர்தா அணியும் ஒரே காரணத்திற்காக இன்ஷா அல்லாஹ் எனது பாவங்கள் மன்னிக்கப்படும் என்றே நான் நம்புகிறேன். பர்தா அணிவது கூட ஒரு ஜிஹாத் என்றே நான் கருதுகிறேன்'' என்று கூறுவது நமக்கு ஒரு பாடமாகும்.

# ஐ.எஸ்.ஐ.எஸ்.ஸை பின்னாலிருந்து இயக்குவது யார்?

• இவோன் ரிட்லி

இஸ்லாமிக் ஸ்டேட், ஐ.எஸ்.ஐ.எஸ், ஐ.எஸ்.ஐ.எல் அல்லது வேறு எந்தப் பெயரில் இருந்தாலும் இந்த அமைப்பு எங்கிருந்து வந்தது என்பது குறித்து எனக்கு எந்தக் கருத்தும் இல்லை. பேரழிவை ஏற்படுத்தும் அதன் வன்முறைக் கொள்கையின் வேர்களைப் பார்க்கின்றபோது, எனக்குப் பெரும் குழப்பமாகவே இருக்கிறது. இன்று இங்கிலாந்தில் பன்மைச் சமூகத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் முஸ்லிம்களுக்காகக் குரல் கொடுப்பதற்கு நான் எப்போதும் பாசாங்கு செய்ததே இல்லை. இதுதொடர்பாக நான் எனது கருத்துகளை வெளியிட்டால், இந்தப் பேரழிவு இயக்கத்தின் முன்னெப்போதும் இருந்திராத எழுச்சியைக் கவலையுடன் கண்காணித்துக் கொண்டிருக்கும் பெரும்பான்மை சமூகத்தினர் அதனை எதிரொலிப்பர்.

ஐ.எஸ்.ஐ.எஸ் இயக்கத்தை எதிர்த்து நான் பேசாததற்குப் பல காரணங்கள் உள்ளன. முதலாவதாக, அவர்கள் யார்? அந்த அமைப்பு எங்கிருந்து வந்தது? அதற்கு எப்படி நிதி கிடைக்கின்றது என்பது குறித்து எனக்கு உறுதியாகத் தெரியாது. நல்ல கட்டுப்பாட்டுடன் செயல்படக்கூடிய, பிறரை அச்சுறுத்தக்கூடிய ‘‘ஹிஸ்புல்லாஹ்’’ என்கிற இயக்கத்தைத் தவிர, ஐ.எஸ்.ஐ.எஸ் போன்ற ஆயுதந் தாங்கிய, பாதுகாப்பான வியூகங்களை வகுத்துச் செயல்படுகின்ற இயக்கத்தை இதற்கு முன்பு மத்திய கிழக்கு நாடுகளில் நான் பார்த்ததே இல்லை. பொதுவான விமர்சனங்களை நான் வெளியிடுவதற்கு முன்பாக, வேறு பலரைப் போலவே நானும், ஐ.எஸ்.ஐ.எஸ் பற்றி மேலும் பல தகவல்களைத் தெரிந்துகொள்ளவே விரும்புகின்றேன்.

எவ்வாறாயினும், இஸ்லாத்தைக் கண்டு அச்சப்படுபவர்கள் (இஸ்லாமோபோபப்ஸ்), இனவெறியர்கள், பிரிட்டிஷ் ஊடகங்கள் சிலவற்றால் ஊக்குவிக்கப்படுகின்ற பயங்கரவாத வல்லுநர்கள் என அழைக்கப்படக் கூடியவர்கள் ஆகியோர், முன்னெப்போதும் இல்லாத அளவுக்கு சிறுபிள்ளைத்தனமான கருத்துகளை தடையின்றி வெளிப்படுத்துவார்கள். ஆனால், அவர்கள் எல்லா நேரங்களிலும் உதவமாட்டார்கள்.

ஒரு முஸ்லிமோ அல்லது முஸ்லிமைப் போன்ற தோற்றமளிக்கும் ஒருவரோ ஐ.எஸ்.ஐ.எஸ்ஸுக்கு எதிரான கண்டனப் பேரணி ஒன்றுக்கு உடனடியாக ஏற்பாடு செய்யவேண்டுமெனக் கூறும் "TWITTERLAND" பாதுகாவலர்களின் பல கோரிக்கைகளை நான் ஏற்க மறுத்துள்ளேன். இதைப்போன்றே ஐ.எஸ்.ஐ.எஸ்ஸுக்கு எதிரான தாக்குதல்களை நிகழ்த்தக் கோரும் ஊடகங்கள் சிலவற்றைப் பார்த்தும் நான் வியப்படைகிறேன்.

இரண்டாவதாக, மத்தியக் கிழக்கில் இஸ்ரேல் இராணுவம் மேற்கொள்ளும் செயல்களுக்கு எனது யூத நண்பர்கள் எவ்வாறு பொறுப்பேற்க முடியாதோ (எப்படிப் பொறுப்பேற்கத் தேவையில்லையோ) அதைப்போலவே ஐ.எஸ்.ஐ.எஸ்ஸின் செயல்களுக்கு நான் ஏன் பொறுப்பேற்க வேண்டும்? ஐ.எஸ்.ஐ.எஸ்ஸுக்கு எதிராக கண்டனப் பேரணி ஒன்றுக்கு நான் ஏன் ஏற்பாடு செய்யவேண்டும்? அதன் செயல்களுக்கு நான் பொறுப்பல்லவே.

வெட்டுக் கத்தியால் மனிதர்களின் தலையையும் கை கால்களையும் ஐ.எஸ்.ஐ.எஸ் கிளர்ச்சியாளர்கள் வெட்டுகின்றார்கள் எனில், ‘‘மலர்களைக் கொய்தல்’’ (DAISY CUTTERS) எனப் பெயரிட்டு கொத்துக் கொத்தாய் இஸ்ரேல் இராணுவம் வீசும் குண்டுகளும் அப்பாவி மக்களின் தலையையும் கைகால்களையும் துண்டிக்கத்தானே செய்கிறது. அந்தக் குண்டுமழை

வீச்சில் அகப்படும் யாரும் எப்படித்தான் தப்பிக்க முடியும்?



மூன்றாவதாக, நான் ஐ.எஸ்.ஐ.எஸ் குறித்து அமைதியாக இருப்பதால், நான் அதனை ஆதரிக்கிறேன் என்ற அர்த்தம் கிடையாது. இப்போதும்கூட முட்டாள்கள் சிலர், எனது மௌனத்தை நான் அதனை ஆதரிப்பதாகவே எடுத்துக்கொள்கின்றனர். ''ஆண் டுவீட்டர்கள்'' சிலரை நான் கேட்டுக்கொள்வதெல்லாம், பெண்களை வன்புணர்ச்சி செய்யும் ஆண்கள் சார்பாக மன்னிப்புக் கோருங்கள் என்பதேயாகும். ஏனெனில், ஒவ்வொரு வன்புணர்ச்சியாளரும் ஆண்தான். எனவே ஒருவகையில் ஆண்கள் அனைவருமே அந்தக் குற்றத்துக்குப் பொறுப்பானவர்கள் ஆவர். முறையற்ற விமர்சனங்களுக்காக எப்போதாவது சில நேரங்களில் தெளிவாகக் கேட்க முடியாத ஒலியில் கூறப்படும் மன்னிப்பை நான் பெற்றுள்ளேன்.

இறுதியாக, நான் வானத்துக்கும் பூமிக்கும் குதிப்பதாலோ, ஐ.எஸ்.ஐ.எஸ் இயக்கத்தை ''பூமியின் கழிசடை'' எனப் பிரகடனம் செய்வதாலோ எதனைச் சாதித்துவிட முடியும்? இவோன் ரிட்லியின் விமர்சனத்தால் ஐ.எஸ்.ஐ.எஸ் தலைவர் அபூபக்கர் அல்பாக்தாதியின் உறக்கம் என்ன கெட்டுவிடவா போகிறது?

மத்திய கிழக்கு நாடுகளில் உறுதியாக நிகழக்கூடிய சில அலங்கோலங்கள் இருக்கின்றன. இருப்பினும், எண்ணிலடங்கா விதவைகளை உருவாக்கும் ஜார்ஜ் புஷ்ஷும் டோனி பிளேரும் 2003இல் ஈராக் நாட்டுக்கு எதிராக சட்டவிரோதப் போரை நடத்தியிருக்காவிட்டால் ஐஎஸ்ஐஎஸ்ஸைப் பற்றி இவ்வுலகம் கேள்விப்பட்டே இருக்காது. மேலும் சிரியாவின் அதிபர் பஷர் அல் அஸதின் இராணுவம் ஓராண்டுக்கு முன் பொதுமக்கள் மீது இரசாயன ஆயுதங்களை வீசியபோது, மேற்கத்திய நாடுகள் தலையிட்டு, விமானங்கள் வானில் பறக்கத் தடை விதித்திருந்தால் ஐ.எஸ்.ஐ.எஸ்ஸின் கொடூர முகத்தை உலகம் கண்டிருக்காது.

கேட்க வேண்டிய கேள்வி இதுதான்: வீழ்த்த முடியாத அளவுக்கு எழுச்சி பெற்றுள்ள ஐ.எஸ்.ஐ.எஸ் அமைப்பினால் உண்மையிலேயே பயன்களைப் பெறுபவர் யார்? மிகப்பெரிய வெற்றியாளர்கள் அஸதின் ஆட்சிக்குள்ளேயே ஒன்றாகச் சேர்ந்து அமர்ந்துள்ளனர். வடமேற்கு சிரியாவில் 2012 நவம்பர் 12இல் அமெரிக்க இதழாளர் ஜேம்ஸ் ஃபோலி மாயமானபோது, எல்லா சந்தேகங்களும் அந்த ஆட்சியின் மீதுதான் இருந்தன. சிரியா அரசின் கைகளிலிருந்த ஜேம்ஸ் ஃபோலி பின்னர் ஐ.எஸ்.ஐ.எஸ். என்ற தலையைத் துண்டிக்கும் கொலை வெறி பிடித்தவர்களின் கைகளில் எப்படிச் சிக்கினார்?

ஐ.எஸ்.ஐ.எஸ்ஸை முறியடிக்க மேற்குலகம் கண்டிப்பாக சிரியா அதிபர் அஸதுடன் பேச்சுவார்த்தை நடத்த வேண்டும் என பிரிட்டிஷ் இராணுவத்தின் முன்னாள் தலைவர் கூறியுள்ளார். ஆனால், ஐ.எஸ்.ஐ.எஸ் என்பதே பஷர் அல் அஸதாலும், அவரின் கூட்டாளியான ஈரானாலும் உருவாக்கப்பட்ட ஓர் இயக்கமாய் இருப்பின், அதன் மேன்மையான 'ரிபப்ளிகன் படை வீரர்கள்' சிரியாவின் பல பகுதிகளில் இருக்கமாட்டார்களா என்ன?

இதில் வேடிக்கை என்னவென்றால், நூரி அல்மாலிக்கின் ஈராக் படைகள் ஐ.எஸ்.ஐ.எஸ் கிளர்ச்சியாளர்களிடம் எளிதில் தோற்று, பேரழிவு ஆயுதங்களைக் கிளர்ச்சியாளர்கள் பயன்படுத்திக் கொள்ளட்டும் என விட்டுச் சென்றதுதான். முறையான பயிற்சி பெற்ற வீரர்கள் தங்களிடம் இருந்த அனைத்தையும், போரிடாமலேயே விட்டுச் சென்றது ஏன் என்பதை என்னால் புரிந்துகொள்ளவே முடியவில்லை. ஐ.எஸ்.ஐ.எஸ் போன்ற எவ்விதக் கட்டுப்பாடும் இல்லாத கிளர்ச்சியாளர்கள் ஐரோப்பாவிலும் அதனைத் தாண்டிய நாடுகளிலும் உள்ள எதிலும் பாதிக்கப்படாத இளைஞர்களுக்கு எப்படி ஊக்கமளிப்பவர்களாக இருப்பார்கள் என்பதை என்னால் புரிந்துகொள்ளவே முடியவில்லை.

தவறுகளைச் செய்ய வேண்டாம். அமெரிக்காவும் அதன் கூட்டணி நாடுகளும் கடந்த பத்தாண்டுகளில் ஈராக் ஆக்கிரமிப்பால் சாதிக்க முடியாததை ஒரு சில வாரங்களில் ஐஎஸ்ஐஎஸ் சாதித்துக் காட்டியுள்ளது. இது தற்செயலாக நடந்ததல்ல. இராணுவ வெற்றிகள் பெரும்பாலும் நன்கு திட்டமிடல், உள் உதவி ஆகியவற்றால்தான் சாத்தியமாகின்றன. எனவே உண்மையாகவே ஐ.எஸ்.ஐ.எஸ்ஸின் பின்னால் யார் இருக்கின்றனர்?

***(கட்டுரையாளர் இங்கிலாந்து பத்திரிகையாளர் ஆவார்)***

***(நன்றி : Middleeast Monitor)***

# நபி (ஸல்) அவர்கள் உயிரோடு இருக்கிறார்களா?

✶ மௌலானா மௌதூதி (ரஹ்) அவர்களிடம் கேட்கப்பட்ட கேள்வியும் அவர் அளித்த விளக்கமும்

**கேள்வி :** *இப்போது நடைபெறுகின்ற மார்க்க விளக்கக் கூட்டங்கள் எல்லாவற்றிலும் நபி(ஸல்) அவர்கள் உயிரோடு இருக்கிறார்கள் என்ற பேச்சுதான் சுற்றிச் சுழன்று கொண்டிருக்கிறது. இது உலமாக்கள் இடையே விவாதப் பொருளாக ஆகிவிட்டிருக்கிறது. இதற்கு ஆதரவான கருத்துள்ளவர்கள் தொடக்கத்தில் அறிவு ரீதியான சான்றுகளைக் கூறிக்கொண்டிருந்தார்கள். ஆனால் இப்போதோ குறைகூறுவது, பழித்துரைப்பது, குற்றம் கண்டுபிடிப்பது வரை இந்த விவகாரம் சென்றுவிட்டது. ஏதோ சில இடங்களில் இவ்வாறு இல்லாமல் இருக்கலாம்.*

*சில மஸ்ஜித்களில் இறைத்தூதர்கள் உலகில் எவ்வாறு உயிரோடு இருந்தார்களோ, அவ்வாறே இப்போதும் உயிரோடு இருக்கிறார்கள். இதனை மறுப்பவர்கள் கா ஃபிர்கள் என உரத்த குரலில் கூறுகின்றார்கள். இன்னும் சிலரோ, உயிருடனும் உடலுடனும் இருக்கின்றார்கள் எனும் கோட்பாடு இணைவைப்பு தொடர்பானது மட்டுமல்ல, இணைவைப்பின் பிறப்பிடம் என்றும் கூறுகிறார்கள். ஃபழாயில் - நற்கருமங்களைப் பொறுத்தவரை அது சிறிதிலும் சிறிய விஷயம். அது குர்ஆனுக்கும் உறுதியான நபிமொழிக்கும் எதிராக இல்லாதபோது ஏற்றுக் கொள்ளப்படுகிறது. ஆனால் ஒரு விஷயம் அகீதா- கோட்பாடு வரை சென்று விடும்போது அதற்கு உறுதியான சான்றுகளும் ஆதாரங்களும் அவசியம். அருள்கூர்ந்து என்னுடைய மனதுக்கு நிம்மதி ஏற்படும் வகையில் நபி (ஸல்) அவர்கள் உயிரோடு இருக்கின்றார் எனும் பிரச்னை குறித்த தெளிவைத் தரவும்.*

**பதில்:** ‘நபி உயிரோடு இருக்கிறார்’ என்பதைக் குறித்து இப்போது உலமாக்களிடையே நடைபெறும் விவாதங்கள் தேவையற்றவை. அதன் மூலம் எதனையும் அடைய முடியாது. அகீதாவைப் பொறுத்தவரை, பெருமானார் அவர்கள் இறைத்தூதராக இருக்கிறார் என்ற நம்பிக்கையே போதுமானதாகும். அவர்கள் தந்துள்ள வழிகாட்டுதல்கள் முழுமையான வழிகாட்டுதல்களாகும். பெருமானாரின் அழகிய முன்மாதிரியைப் பின்பற்றுவதே நமக்குப் போதுமானதாகும். இதனை அறிந்து கொள்வதற்கு நமக்கு குர்ஆனும் நபிமொழியும் அடித்தளமாகவும். திரும்புமிடமாகவும் இருக்கின்றன.

இனி, நபி (ஸல்) அவர்கள் இவ்வுலகை விட்டுச் சென்றுவிட்ட பின் எப்படி வாழ்கிறார்? பர்ஸக் வாழ்வா, ரூஹானி வாழ்வா அல்லது உடலுடன் வாழ்கிறாரா எனும் விவாதத்துக்கு என்ன தேவை உள்ளது? எவ்வாறாயினும் பெருமானார் அவர்கள் ஹிஜ்ரி 11இல் இறந்துவிட்டார்கள் எனும் நிகழ்வை மறுக்க முடியாது. இன்று உம்மத்தினருக்கு வழிகாட்டுவதற்காக அவர் நம்மிடையே இல்லை. அவர்களைப் பின்பற்றுவதற்கு நாம் அவர்களின் இருப்பைத் தேடுவதற்குப் பதிலாக குர்ஆனின் பக்கமும் நபிமொழியின் பக்கமும் திரும்பிவிட வேண்டும். பர்ஸக்கின் வாழ்வா உடலுடன் வாழ்வா எனும் விவாதத்தில் முடிவு எதுவாக இருந்தாலும், அது இந்த யதார்த்தத்தில் எவ்வித மாறுபாட்டையும் ஏற்படுத்திவிடப் போவதில்லை.



இந்தக் குறிப்பிட்ட விவாதத்தில், ஒரு குறிப்பிட்ட கோட்பாட்டை அடைந்து கொள்ள வேண்டும் என அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நம்மை வலியுறுத்த வில்லை என்பதால் இந்த விவாதம் தேவையற்றதும் பயனற்றதுமாகும். முஸ்லிம்

ஒருவர் இப்பிரச்னையில் ஈடுபடாமல் இருந்தால் அல்லது இதில் எந்த முடிவுக்கும் வராமலேயே இருந்துவிட்டால் அவரின் இறைநம்பிக்கையில் எவ் விதக் குறைவும் ஏற்பட்டுவிடப்போவதில்லை. நபியின் வாழ்வைக் குறித்து அது பர்ஸக்கின் வாழ்வா அல்லது உடலோடு கூடிய வாழ்வா என்பதில் நீ என்ன கோட் பாட்டை வைத்திருந்தாய் என்று கேட்கப்படப் போவ தில்லை. நம்மிடம் ஒரு தீர்க்கமான கோட்பாட்டை மேற்கொள்ளும்படி எந்த முடிவான விஷயமும் குர்ஆனிலும் நபிமொழியிலும் சொல்லப்படவில்லை. நபித்தோழர்களின் மத்தியிலும் இத்தகைய விவாதம் இருந்ததில்லை. நபி (ஸல்) அவர்களின் சந் ததியினரிலும் யாரும் இவ்விவகாரத்தில் இன்ன அகீதா வைத்தான் மேற்கொள்ள வேண்டும் என அறிவுறுத்திய தில்லை.

குர்ஆன் ஒரு படைப்பு எனும் பிரச்னையில் கலீஃபா மாமூன் செய்த அதே தவற்றை, நபியின் வாழ்வு குறித்து உலமாக்களும் செய்கின்றார்கள் என நினைக்கிறேன். அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் இதை ஏற்றுக் கொள்வதில்தான் அல்லது ஏற்றுக்கொள்ளாததில்தான் நஜாத்- ஈடேற்றம் உள்ளது எனச் சொல்லவும் இல்லை. இதன் மீது நம்பிக்கை கொள்ள வேண்டும் என மக்களை அழைக்கவும் இல்லை. தேவையின்றி இதனை இஸ்லாத்தின் ஒரு கோட்பாடாக, இறைநம்பிக்கையிள் கிளையாக நிர்ணயிக்கிறார்கள். இதை ஏற்பதையும் மறுப்பதையும் நஜாத்தின்-ஈடேற்றத்தின் மையமாக நிறுவுகிறார்கள். இதன் மீது நம்பிக்கை கொள்ள வேண்டும் என அழைப்பு விடுக்கிறார்கள். இதனை நம் பாதவர்களை இழிவுபடுத்துகிறார்கள். இவ்விஷயங் களுக்கு மார்க்கத்தில் ஏதேனும் முக்கியத்துவம் இருந் திருந்தால், தெளிவாகவும் உள்ளது உள்ளபடியும் எடுத் துரைப்பதில் அல்லாஹ்வும் இறைத்தூதரும் எந்தக் குறையும் வைத்திருக்க மாட்டார்கள்.

இந்தப் பிரச்னை ஒருபோதும் அடிப்படைப் பிரச்னைகளில் ஒன்றல்ல. இதனை வலுக்கட்டாயமாகச் சேர்ப்பதும் அல்லது முக்கியப் பிரச்னையைப் போன்ற படித்தரம் வழங்குவதும் முற்றிலும் தவறான செயலா கும். ஒருவர் முற்றிலும் இதிலிருந்து விலகியிருந்தால் அல்லது கவனமற்றிருந்தால், எந்தக் கோட்பாட்டையும் கருத்தையும் ஏற்படுத்திக் கொள்ளாமல் இருந்தால் அவரிடம் மறுமையில் இது பற்றிய கேள்வி கணக்கு இருக்காது. இதனால் மறுமையில் எந்த பாதிப் பும் ஏற்படப்போவதில்லை. இப்பிரச்னையில் ஒரு கோட்பாட்டை உறுதிசெய்து விட்டு அதைப் பரப் புரை செய்கின்றாரே அவர்தான் ஆபத்தில் இருக் கிறார். ஏனெனில் அவரின் அகீதாவில் ஆதாரம் உள் ளது, ஆதாரமற்றது ஆகிய இரண்டுக்கும் வழி இருக்கிறது.

***தர்ஜுமானுல் குர்ஆன் டிசம்பர் 1959***

*தமிழில் :* **ஜி. அப்துர் ரஹீம்**





# ஹிஜாபைப் புறக்கணித்தால்...?

• A.R.கமருன்னீசா ஜாபர் அலீ, கோவை

பெண்கள் நாட்டின் கண்கள், பெண்மையைப் போற்றுவோம் என்ற அடிப்படையில் பூமியைத் தாய் என அழைக்கின்றனர். நதிகளுக்குப் பெண்களின் பெயரைச் சூட்டி அழகு பார்க்கின்றனர். ஆனால், பெண்கள் தம்மைத் தாமே இழிவுபடுத்திக் கொள்கின்றனர். தங்களின் நடை, உடை, பேச்சு, பார்வை ஆகியவற்றின் மூலமாக சில பெண்கள் கேவலப்படுகிறார்கள். ஆனால், ஒரு பெண் எப்படி நடந்து கொண்டால் அது அவளுக்கும், சமூகத்திற்கும் நன்மை பயக்கும், இம்மையிலும், மறுமையிலும் வெற்றி அடையலாம் என்பதை அல்லாஹ் திருக்குர்ஆனில் கூறுகிறான் :

''ஆதத்தின் மக்களே! உங்களுடைய வெட்கத்தலங்களை மறைப்பதற்காகவும் உங்கள் உடலுக்குப் பாதுகாப்பாகவும் அலங்காரமாகவும் இருக்கக்கூடிய ஆடைகளை நாம் உங்களுக்கு அருளியிருக்கின்றோம். ஆயினும் இறையச்சம் (தக்வா) எனும் ஆடையே மிகச் சிறந்த ஆடையாகும்.'' (7:26)

நபி (ஸல்) கூறினார்கள்: ''பெண்கள் ஆடை அணிந்தும் நிர்வாணமாகக் காட்சியளிப்பார்கள். பிறரைத் தம் பக்கம் ஈர்த்து தாமும் பிறர் பக்கம் சாய்வார்கள். அவர்கள் சுவனத்தில் நுழையமாட்டார்கள். சுவனத்தின் வாசனையைக்கூட நுகர மாட்டார்கள்.'' (முஸ்லிம்)

ஆனால் பெண்கள் இதையெல்லாம் கண்டும் காணாதவர்களாகத் தான்தோன்றித்தனமாக உடையணிகின்றனர். நாங்கள் அணியும் ஆடையைக்கூட எங்கள் விருப்பப்படி அணிய உரிமை இல்லையா, சுதந்திரம் இல்லையா என்று கேட்டு கண்முடித்தனமாக அரைகுறை ஆடைகளை அணிகின்றனர். அதன் விளைவு, கேவலங்கள், வன்கொடுமை, ஈவ்டீசிங் - இவையெல்லாம்தான்.

என் கண் முன்னால் நடந்த உண்மை நிகழ்வு இது. பேருந்து நிலையத்தில் நான் நின்று கொண்டிருந்தேன். கூட்ட நெரிசல். ஹிஜாப் அணியாமல், வயிறையும் இடுப்பையும் காட்டிக்கொண்டு, மெல்லிய ஆடை அணிந்த ஒரு முஸ்லிம் பெண் என் அருகில் நின்று கொண்டிருந்தாள். திடீரென என்னைத் தாண்டிச் சென்றான் ஒரு ஆஜானுபாகுவான இளைஞன்.

அந்தப் பெண்ணின் அருகில் சென்று அவளையே பார்த்துக் கொண்டிருந்த அவன், யாருமே எதிர்பாராத வண்ணம் திடீரென்று அந்தப் பெண்ணின் மார்பகத்தில் தன் இரு கைகளையும் வைத்து, அவளைக் கட்டிஅணைத்துவிட்டு ஓடி விட்டான். அந்தப் பெண் அலறவே பேருந்து நிலையத்தில் இருந்த அனைவரும் திரும்பி, அவனைப் பிடியுங்கள் என்று கூச்சலிட, கூட்ட நெரிசலில் அவன் ஓடி மறைந்துவிட்டான். அந்தப் பெண்ணுக்கு ஏற்பட்ட அவமானத்தால் அவள் உடல் நடுநடுங்க, தன் முகத்தை இரு கைகளால் மூடியவாறு கதறிக் கதறி அழத் தொடங்கினாள்.

அவள் அருகில் சென்று அவள் கைகளைப் பற்றிய நான் ஆறுதல் கூறினேன். அந்தப்பெண் என் இரு கைகள் மீது அவளுடைய முகத்தை மறைத்துக்கொண்டாள். பிறகு நான் ஏறிய பேருந்தில் அவளும் ஏறினாள். என் அருகில் அமர்ந்தாள். ஆனாலும் உடல் நடுக்கமும் அழுகையும் நின்றபாடில்லை. உங்கள் பெயர் என்ன என்றேன் நான் மெதுவாக. பாத்திமா என்றாள் அவள். நம்முடைய பாதுகாப்பைக் கருதிதான் கருணையுள்ள இறைவன் ஹிஜாபை நமக்குக் கடமையாக்கியுள்ளான். அல்லாஹ்வின் கட்டளையைப் புறக்கணித்தால் நமக்கு எப்படி கண்ணியம் கிடைக்கும் என்றேன்.

அழுகையை நிறுத்திய பாத்திமா சொன்னாள்: ஆமாம். நான் செய்தது தவறுதான். அந்தக் காமவெறியன் பர்தா அணிந்திருந்த உங்களைத் தாண்டி வந்துதானே என்னைக் கேவலப்படுத்தினான். இனிமேல் நான் பர்தா அணிந்துதான் வெளியே வருவேன் என உறுதியுடன் கூறினாள். இறங்க வேண்டிய இடமும் வந்தது. பேருந்திலிருந்து இறங்கி நடந்த பாத்திமா பர்தா மட்டுமே பாதுகாப்பு தரும் என்ற தெளிவான முடிவுடன் புன்முறுவல் பூத்தவளாகச் சென்றாள்.

பாத்திமா போல எத்தனையோ பெண்கள் நாகரிகம் என்ற பெயரில் ஆடைக்குறைப்புடன் நடக்கின்றனர்.

# பெண்ணுலகம்



இஸ்லாத்தில் துறவறம் இல்லை. அதிக சுதந்திரமும் இல்லை. கட்டுப்பாடு இல்லாத சுதந்திரம் ஆபத்தானது. பெண்கள் இதைப் புரிந்துகொள்ள வேண்டும் ஆடைக் கட்டுப்பாடு இல்லாமல் இருக்கும்பட்சத்தில் பெண்கள் அனுபவிக்கும் துன்பங்களான ஈவ்டீசிங், பலாத்காரம், ஆகியவற்றுக்கு பெண்களே காரணமாகி விடுகிறார்கள். பிறர் நம்மைப் பார்த்து நீங்க ரொம்ப அழகா இருக்கீங்க. உங்கள் உடை அழகாக இருக்கிறது என்று சொல்வதற் காகவே பெண்கள் இப்படிச் செயல்படுகிறார்கள்.

பெண்களின் அழகு அவர்களின் கணவனுக்குத்தான் என்பதை மறந்துவிடுகின்றனர். பெண்கள் தங்கள் அலங் காரத்தை கண்டவர்களிடமெல்லாம் வெளிப்படுத்து கின்றனர். திருமண மண்டபங்களிலும், பொது இடங் களிலும், பூக்காரரிடமும், பால்காரரிடமும், கேபிள் டிவிகாரரிடமும், வாட்ச்மேனிடமும் சர்வ சாதாரணமாக குழைந்து பேசுகின்றனர்.

நபி (ஸல்) கூறினார்கள்: எந்தப் பெண் நறுமணம் பூசிய நிலையில் அதை (ஆண்கள்) நுகர வேண்டும் என் பதற்காக அவர்களுக்கு மத்தியில் நடந்து செல்கிறாளோ அவள் விபச்சாரியாவாள். (முஸ்னத், அஹ்மத்)

மேலும் எந்தப் பெண்ணாவது தனது இல்லத்திலன்றி தன் ஆடையைக் களைவாளாயின் அவள் அல்லாஹ் வின் பாதுகாப்பை உடைத்துக் கொள்கிறாள். (அபூதாவூத், திர்மிதி)

சிந்திக்க வேண்டும் பெண்களே! அல்லாஹ்வுடைய உதவி இல்லாமல் இம்மையிலும் மறுமையிலும் நாம் நன்மையை அடைய முடியுமா? ஒரு பெண் ஹிஜாப் அணிகிறாள் என்றால் நோக்கம் நிறைவேற வேண்டும். ஆடை மெல்லியதாக இருக்கக்கூடாது. உலகில் உள்ள அனைத்தையும் மனிதர்களுக்காகப் படைத்த இறைவன் அந்த மனிதர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என் பதையும் மிக அழகாக திருக்குர்ஆனில் கூறியிருக்கிறான். ஒரு பெண்ணுக்கு உடையில் மட்டும் ஹிஜாப் போதாது. பேச்சு, பார்வை, நடை ஆகியவற்றிலும் ஹிஜாபைப் பேண வேண்டும். ஒரு பெண்ணின் பேச்சினால் கவரப் பட்டு ஆணுக்கு சபலம் ஏற்படலாம். அதனால் அல்லாஹ் கூறுகிறான். ''பெண்களாகிய நீங்கள் குழைந்து பேசாதீர்கள். உள்ளத்தில் கெட்ட எண்ணத் தைக் கொண்டிருக்கும் யாரேனும் ஒருவன் சபலம் கொள்ளக் கூடும்.'' (33:22)

பேச்சுதானே என்று ஆண்களிடம் குழைவாகப் பேசுவதை பெண்கள் தவிர்க்க வேண்டும். முதல் பார்வை உங்களுடையது. இரண்டாவது பார்வை ஷைத் தானுடையது என நபி (ஸல்) கூறியுள்ளார்கள். ஆனால் பெண்களோ கால்களில் சலங்கை உள்ள கொலுசு போட்டுக் கொண்டு அந்நிய ஆண்களைத் திரும்பிப் பார்க்க வைக்கின்றனர். ஒரு பெண் தொழுது, நோன்பு, ஜகாத், ஹஜ் என எல்லா நற்செயல்களையும் செய்து விட்டு, நல்ல அலங்காரம் செய்து கொண்டு பிறரைக் கவர்ந்தாள் என்றால் நிச்சயாக எல்லா நன்மைகளையும் இழந்து விடுவாள். சுவனத்தின் வாசனையைக்கூட நுகர மாட்டாள்.

தம் இல்லத்துப் பெண்களின் ஆடை விஷயத்தில் கண்டு கொள்ளாமல் இருக்கும் ஆண்களைப் பற்றி நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ''குடும்பத்தாரின் அசிங் கங்களை, தீயநடத்தைகளை அங்கீகரிப்பவனுக்கு அல்லாஹ் சுவர்க்கத்தைத் தடை செய்து விட்டான்.''

கணவனின் நெருங்கிய உறவினர்கள் மரணத்தைப் போன்றவர்கள். மரணத்தைக் கண்டு பயப்படுவதைப் போல அவர்களைப் பயப்பட வேண்டும். அதாவது ஒரு பெண் தனது கணவனின் சகோதரர்கள் மற்றும் கணவனின் சிறிய, பெரிய தந்தை மக்கள் போன்றோரி டம் ஹிஜாபைக் கடைப்பிடிக்க வேண்டும். (முஸ்லிம்)

ஒரு ஆண் அந்நியப் பெண்ணுடன் தனித்திருப் பானேயானால் நிச்சயமாக மூன்றாவதாக ஷைத்தான் இருக்கிறான். (திர்மிதி)

பார்வை மூலமாகவே அனைத்துத் தவறுகளும் தொடங்குகின்றன.

''கண்ணின் விபச்சாரம் என்பது தவறான பார்வை யாகும் (புகாரி)''

இன்று பெண்கள் தங்களின் பெரியம்மா, சின்னம்மா, சிறிய, தந்தை, பெரிய தந்தை ஆகியோரின் மகன்களிடத்தில் ஹிஜாப் இல்லாமல் பழகுகின்றனர். ஆனால் இவர்களும் திருமணம் செய்ய அனுமதியுள்ள வர்கள். இவர்களுடன் பெண்கள் ஹிஜாப் பேண வேண் டும். பயணம் செய்யும் போது பெண்கள் திருமணம் செய்ய அனுமதி இல்லாதவர்களான தந்தை, மகன், அண்ணன் இவர்களுடன் மட்டுமே ஹிஜாபுடன் பயணம் செய்ய வேண்டும்.

''முஃமின்களே நீங்கள் அனைவரும் சேர்ந்து அல்லாஹ்வின் பக்கம் பாவமன்னிப்புக் கோரி மீளுங் கள். நீங்கள் வெற்றி அடையக்கூடும் (24:31)''

எனவே பெண்கள் எல்லா நேரங்களிலும் அல்லாஹ் வுக்குக் கட்டுப்பட்டு வீட்டிலும், வெளியிலும் பயணத் திலும், வேலை செய்யும் இடங்களிலும் நடப்போமாக. ஈருலகிலும் அல்லாஹ் தன் மன்னிப்பைத் தந்தருள் வானாக!

## ‘ஜெய்ஸ்ரீராம்’ சொல்ல மறுத்த
# இராணுவ வீரருக்கு நேர்ந்த அவலம்



இந்திய இராணுவத்தில் ராஜ்புதனா ரைஃபிள் படைப் பிரிவில் பணியாற்றி வந்த சுபேதார் மௌலவி இஷ்ரத் அலீ ‘ஒழுங்கின்மை’ நடவடிக்கைக்கு உட்படுத்தப்பட்டுள்ளார். ஏன் தெரியுமா? வழக்கமாக உச்சரிக்கப்படும் ‘ஜெய்ஹிந்த்’ என்பதற்குப் பதிலாக ‘ஜெய்ஸ்ரீராம்’, ‘ஜெய் மாதா தி’ ஆகிய முழக்கங்களை உச்சரிக்க மறுத்ததே இதற்குக் காரணம்.

தில்லி இராணுவக் குடியிருப்பில் உள்ள வீட்டை உடனடியாகக் காலி செய்யுமாறு அவருக்கு உத்தரவிடப்பட்டது. இதனை எதிர்த்து அவர் தில்லி உயர்நீதி மன்றத்தில் மனு தாக்கல் செய்துள்ளார். அது நிலுவையில் உள்ளது. இதற்கிடையே, அக்டோபர் 9 அன்று, அவர் வீட்டில் இல்லாதபோது, அவரது குடும்பத்தினர் வலுக்கட்டாயமாக வீட்டை விட்டு வெளியேற்றப்பட்டுள்ளனர்.

அவசர உதவிக்கு 100 என்ற தொலைப்பேசி எண்ணில், அவரது குடும்பத்தினர் தில்லி காவல்துறையை அணுகியுள்ளனர். ஆனால், உள்ளூர் காவல்துறையினரை அந்த வளாகத்துக்குள் அனுமதிக்க இராணுவக் காவலர்கள் மறுத்துவிட்டனர். இராணுவத்தினர், அவர்களை வீட்டை விட்டு வெளியேற்றி, வீட்டில் இருந்த பொருள்கள் அனைத்தையும் வெளியே வீசியெறிந்துவிட்டனர். ‘நீங்கள் எங்கு செல்லவேண்டும் என விரும்புகின்றீர்களோ அங்கு செல்லுங்கள்’ எனக் கூறி நடுத்தெருவில் விட்டுள்ளார்கள்.

இந்திய இராணுவம் எந்த அளவுக்குக் காவிமயமாகி வருகிறது என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு. தேசிய ஊடகங்கள் இதனைக் கண்டுகொள்ளவே இல்லை என்பது மிகுந்த வருத்தத்துக்குரியது. இந்நிகழ்வு இந்திய இராணுவத்தின் மதச்சார்பற்ற தன்மையைக் கேள்விக்குறி ஆக்கியுள்ளது. இராணுவ வீரருக்கு ஏற்பட்டுள்ள இந்தக் கொடுமை கடுமையான கண்டனத்துக்குரியது.

# மதவிழாக்களில் பங்கேற்கும் கம்யூனிஸ்டகள்



பொதுவாக ‘காம்ரேடுகள்’ என அழைக்கப்படும் கம்யூனிசத் தோழர்கள், மதத்தைக் குறைகூறக் கிடைக்கும் எந்த வாய்ப்பையும் நழுவவிடமாட்டார்கள். ஆனால், அவர்களே இப்போது அரசியல் ஆதாயத்துக்காக மதத்தைப் பயன்படுத்தத் தயாராகிவிட்டார்கள். கேரளாவிலும், மேற்கு வங்கத்திலும் நடைபெறுகின்ற மத விழாக்களில் அவர்களும் இப்போது கலந்துகொள்ளத் தொடங்கிவிட்டனர்.

ஆன்மிக நன்மைக்காக அவர்கள் இதனைச் செய்யவில்லை. உலகாயத நலன்களுக்காகவே இதனை மேற்கொள்கின்றனர் என்கிறார் ஷமீம் தாரிக். அக்டோபர் 10 தேதியிட்ட ‘தி இன்குலாப்’ என்ற உருது நாளிதழில் அவர் இவ்வாறு எழுதியுள்ளார்.

அதில் சில நிகழ்வுகளையும் குறிப்பிட்டுள்ள அவர், கம்யூனிஸ்ட் கட்சியின் ஊழியர்கள், மதவிழாக்களில் பங்கேற்பதற்கு மட்டுமல்ல, மதப் புனிதத்தலங்களுக்கு அழைத்துச் செல்லும் ஏற்பாடுகளைச் செய்வதற்கும் அறிவுறுத்தப்பட்டுள்ளனர். மதநம்பிக்கையாளர்களும் மனிதகுலத்தை நேசிப்பவர்கள்தாம்; அடக்குமுறைகள் எந்த வடிவத்தில் வந்தாலும் அதனை எதிர்த்து நிற்கக்கூடியவர்கள்தாம் என்ற யதார்த்தத்தை கம்யூனிசத் தோழர்கள் உணர்ந்துகொள்ள வேண்டும். ஆனால், மதத்தின் பெயரால் மக்களை ஏமாற்றுபவர்கள் மீது மட்டும் தோழர்கள் மிகக் கவனமாக இருக்கவேண்டும் எனவும் அவர் அதில் எழுதியுள்ளார்.

# மீண்டும் ஓடத்தொடங்கிய ‘ஜாஃப்னாவின் ராணி’



இலங்கையில் நிகழ்ந்த உள்நாட்டுப் போர் காரணமாக, 24 ஆண்டுகளுக்கு முன் நிறுத்தப்பட்ட ஜாஃப்னா - கொழும்பு இரயில் போக்குவரத்து மீண்டும் தொடங்கப்பட்டுள்ளது. இந்தியாவின் உதவியுடன் அமைக்கப்பட்டுள்ள இந்த ரயில் பாதையை இலங்கை அதிபர் மஹிந்த ராஜபக்ஷே தொடங்கி வைத்தார்.

இந்த வழித்தடத்தில் ஓடிக்கொண்டிருந்த ‘ஜாஃப்னாவின் ராணி’ என்ற புகழ்பெற்ற ரயில், தமிழர்கள் பெரும்பான்மையாக வசிக்கும் வடமாகாணத்தை இலங்கையின் இதர பகுதிகளுடன் இணைக்கும் முக்கிய வழித்தடமாக இருந்தது குறிப்பிடத்தக்கது.

# பாலஸ்தீனத்தை அங்கீகரித்த ஸ்வீடன்


மார்காட்வால்ஸ்ட்ராம்

ஸ்வீடன் அரசாங்கம் பாலஸ்தீன நாட்டை அதிகாரபூர்வமாக அங்கீகரித்துள்ளது. இந்த அங்கீகாரம் தடைபட்டுப்போன இஸ்ரேல் - பாலஸ்தீன் அமைதிப் பேச்சுவார்த்தை மீண்டும் தொடங்க உதவும் எனவும் அது தெரிவித்துள்ளது. இந்த அறிவிப்புக்கு பாலஸ்தீன அதிபர் பாராட்டு தெரிவித்துள்ளார். இதனை இஸ்ரேல் கடுமையாக விமர்சித்துள்ளது.

''எங்களின் முடிவு ஓர் இக்கட்டான நேரத்தில் வெளிவந்துள்ளது. ஏனென்றால், கடந்த ஆண்டில் அமைதிப் பேச்சுவார்த்தை எப்படித் தடைபட்டது? ஆக்கிரமிக்கப்பட்ட பாலஸ்தீன நிலத்தில் புதிய யூதக் குடியிருப்புகளைக் கட்டுவதற்கான முடிவுகள் 'இரு நாடு' என்ற கொள்கைக்கு எப்படிச் சிக்கலாக மாறுகின்றன? காஸா நகருக்கு வன்முறைகள் ஏன் திரும்ப வந்தன என்பதையெல்லாம் நாங்கள் கண்டபிறகே இந்த முடிவு எடுக்கப்பட்டது என செய்தியாளர்களிடம் பேசிய ஸ்வீடன் வெளியுறவு அமைச்சர் மார்காட் வால்ஸ்ட்ராம் தெரிவித்தார். மற்ற ஐரோப்பிய நாடுகளும் எங்களின் பாதையைப் பின்பற்றும் என்ற நம்பிக்கை இருப்பதாகவும் அவர் கூறினார்.

# தெற்காசியாவில் ஆதிக்கம் செலுத்த முனையும் பொது பல சேனா



ஆர்.எஸ்.எஸ். உதவியுடன் தெற்காசியாவிலும், தென்கிழக்கு ஆசியாவிலும் புத்த-இந்து அமைதி மண்டலத்தை உருவாக்க இலங்கையின் பௌத்தத் தீவிரவாத அமைப்பான பொது பல சேனா திட்டமிட்டுள்ளது. கொழும்பு நகரில் அக்டோபர் 6 அன்று நடைபெற்ற செய்தியாளர் கூட்டத்தில் பேசியபோது, பொது பல சேனாவின் பொதுச்செயலாளர் வென் ஞானசார தேரா இதனைத் தெரிவித்தார்.

இது தொடர்பாக நாங்கள் ஆர்.எஸ்.எஸ் அமைப்பின் உயர்நிலைக் குழுவினருடன் பேச்சு நடத்திக் கொண்டிருக்கின்றோம். விரைவில் பிரதமர் நரேந்திர மோடியைச் சந்திக்க முடியும் என நம்புகின்றோம் என்றார் புத்த மதத் தலைவராக இருக்கக்கூடிய தேரா.

# "இடதுசாரிகளின் கூட்டமைப்பு வரவேற்கத்தக்கது"

## – சையத் ஜலாலுத்தீன் உமரி


சையத் ஜலாலுத்தீன் உமரி

''பாஜகவுக்கு எதிராக தேசிய அளவில் பரந்து விரிந்த இடதுசாரிக் கூட்டமைப்பை உருவாக்கும் முயற்சியை ஜமாஅத்தே இஸ்லாமி ஹிந்த் வரவேற்கிறது. இத்தகைய கூட்டமைப்புகளுக்கு ஜமாஅத் ஆதரவு தெரிவிக்கும்'' என தில்லியில் உள்ள ஜமாஅத் தலைமையகத்தில் நடந்த செய்தியாளர் சந்திப்பின் போது அகில இந்தியத் தலைவர் சையத் ஜலாலுத்தீன் உமரி தெரிவித்தார்.

வளர்ச்சி முழக்கம், வகுப்புவாதம், காவிமயமாதல் ஆகியவற்றை ஒருங்கிணைத்துச் செல்லும் மும்முனைத் திட்டத்துடன் நரேந்திர மோடி அரசு செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. இந்த மும்முனைத் திட்டத்தை நடைமுறைப்படுத்தியதால்தான் குஜராத்தில் வடோதராவிலும், தில்லியில் திரிலோக்புரியிலும் அண்மையில் வகுப்புக் கலவரங்கள் நிகழ்ந்தன. பன்னாட்டுத் தனியார் நிறுவனங்களின் நிதியுதவி கொண்டு ஒட்டுமொத்த ஊடகங்களையும் பாஜக விலைகொடுத்து வாங்கியுள்ளது. ஊழலும் கறுப்புப்பணமும் இப்போது பாஜகவுக்கு ஒரு பொருட்டே அல்ல என அமீர் குற்றம் சாட்டினார்.

வெளிநாட்டில் பதுக்கியுள்ள கறுப்புப் பணத்தை மீட்டு இந்தியாவுக்குக் கொண்டு வருவோம் என வாக்குறுதி அளித்து ஆட்சிக்கு வந்த பாஜக, பிறகு எதுவுமே செய்யவில்லை. இந்தச் சூழ்நிலையில் இடதுசாரிகளின் கூட்டமைப்பை மேலும் விரிவாக்குவது ஊழலுக்கு எதிரான போராட்டத்தில் முன்னேற்றம் ஏற்பட உதவும் என்றார் செயலாளர் இஜாஸ் அஹ்மத் அஸ்லம்.

# நேச மடல்

நேச மடல் வரைதல் எனும் இந்தத் திறவுகோலை வாசித்த பின் கீழ்க்கண்ட நன்மைகள் உங்களுக்குக் கிடைக்கும்.

★ உள்ளார்ந்த காதலுக்கான நிலையான ஆதாரம் கிடைக்கும்.

★ கடினமான சூழ்நிலைகளை எதிர்கொள்ளும் வழி பிறக்கும்.

★ பயணத்திலும், கூடியிருக்கும்போதும் கவனத்தை நினைவுகூர ஒரு வாய்ப்பு கிட்டும்.

**நேச மடல்**

அதாவது கணவனும் மனைவியும் தங்களின் மன உணர்வுகளை, உள்ளத்தில் உறைந்து கிடக்கும் உண்மையான உணர்ச்சிகளைக் கடிதம் மூலம் வெளிப்படுத்தலாம். நேச மடல் எழுதி உங்கள் நேசத்தை, அன்பை உறுதிப்படுத்த வேண்டும். இந்தக் கடிதத்தைப் பயணத்தில் இருக்கும்போதும் எழுதலாம். சாதாரணமாக வீட்டில் இருக்கும்போதும் எழுதலாம்.

**கவலை தந்த கடிதம்**

அன்புத் தந்தை ஒருவர், தனது மகளுக்கும், மருமகனுக்கும் இடையில் ஏற்பட்ட பிரச்னைக்குத் தீர்வு காண என்னை நடுநிலையாளராக இருக்கும்படி கேட்டுக் கொண்டார். அவர்கள் இருவருக்கும் திருமணம் முடிந்திருந்தது. ஆனால் பெண்ணை, கணவன் வீட்டுக்கு இன்னும் அழைத்துச் சென்றிருக்கவில்லை.

மருமகன் கணிதத்தில் Phd செய்து கொண்டிருந்தார். அதனால்தானோ என்னவோ அவரது குணமும் கடினமானதாக இருந்தது. மென்மையான உணர்வுகள் இல்லாதவராகவே தன்னை அவர் வெளிப்படுத்திக் கொள்வார். ஒருநாள் பெண் வீட்டுக்கு வந்திருக்கிறார். சிறிது நேரத்திலேயே சம்பிரதாயமாக நான்கு வார்த்தைகள் பேசிவிட்டு, தனக்கு வேறு ஓர் அலுவல் இருப்பதாகக் கூறிச் சென்றுவிட்டார். மனைவியோ அவரது உணர்வுகளற்ற நடவடிக்கையை எண்ணி அழுதே விட்டாள்.

அவனோ அன்று இரவு ஒரு கடிதத்தை அவளுக்கு அனுப்பினான். கடிதம் என்பதைவிட அதனை ஆய்வுக் கட்டுரை என்றே கூறவேண்டும். அதில் கிரேக்கம், ரோமம், இஸ்லாம் ஆகியவற்றில் 'அழுகை' பற்றி என்னென்ன கருத்துகள் கூறப்பட்டுள்ளன என்பதை எழுதி அனுப்பி இருந்தான். அதைப் படித்த பின் உள்ளங்கள் இன்னும் விலகிச் சென்றுவிட்டன.

இருவரது குணமும் ஒத்துப்போகாது. இந்த உறவை முறித்து விடுவதே நல்லது என்பதே எனது தீர்வாக இருந்தது. அதற்குப் பிறகு அவளது மனதுக்கேற்ற வரனைத் தேடி திருமணம் செய்து வைக்கப்பட்டது. இப்போது இத்தம்பதியினர் அழகான குழந்தைகளைப் பெற்று அன்போடு இல்லறம் நடத்திக் கொண்டிருக்கின்றனர்.

**செயல் முறை**

★ அன்பு மனைவிக்குக் காதல் கடிதத்தைப் பயணத்தில் இருக்கும்போது எழுதலாம்.

★ மனைவி நோயுற்றிருக்கும்போது ஆறுதல் கூறி கடிதம் எழுதலாம்.

★ திருமண நாள் போன்ற நிகழ்வின்போது மகிழ்ச்சியை, வாழ்த்துகளைப் பரிமாறிக் கொள்ள நேச மடல் வரையலாம்.

★ எந்தவொரு விஷேசமும் இல்லாவிட்டாலும் உணர்வுகளை வெளிப்படுத்த கடிதம் எழுதலாம்.

| இந்தப் பழக்கங்களை விட்டுவிடவும் | இவற்றை மேற்கொள்ளவும் |
|---|---|
| ★ மை தீர்த்துவிட்டது, எழுதும் தாள் மடிக்கப்பட்டுவிட்டது. | எழுதுவதற்காக பேனா முனை எப்போதும் துடித்துக் கொண்டிருக்கிறது. |
| ★ உள்ளக் குமுறல்களைக் கோபத்துடன் வெளிப்படுத்தும் கடிதம் எழுதுதல். | அன்பும், நேசமும், காதலும் நிரம்பி வழியும் கடிதம் எழுதுதல். |
| ★ முக்கியமான, குறிப்பிட்ட நிகழ்வின்போது மட்டும் கடிதம் எழுதுவது. | நெடுந்தொடர் போன்று தொடர்ச்சியாக கடிதங்கள் எழுதுவது. |
| ★ சிறிய மடல் வரைதல். | நீண்ட, நெடிய கடிதம் எழுதுதல். |
| ★கடிதத்தில் பொருள்களின் தேவைகளை மட்டுமே கோருதல். | கடிதத்தில் உடல் ரீதியான, உள ரீதியான தேவைகளைக் கோருதல். |

உர்துவில் : முஹியுத்தீன் காஸி தமிழில் : ரிஸ்வானா ஷகீல்

# தலைமையின் தலையாய கடமை

தொண்டர்களை தொண்டர்களாகவே
வைத்திருக்க விரும்புவோர்
தன்னலம் மிக்க தலைவர்களாவர்!

தன்னைவிட நல்ல-வல்ல தலைவர்கள்
தோன்றிட விரும்புபவரே
தலைமுறையின் தலைவராவார்!

அலுவலகம் முதல் அரசியல் களம் வரை
இன்று நேர்ந்திருப்பது தலைமைப் பஞ்சம்!

ஒருங்கிணைக்கும் ஆற்றல்
முடிவெடுக்கும் திறன்
முன்னேற்றும் சக்தி- என
அத்தனை அம்சங்களையும்
வளர்த்தால் தான்
சமூகம் வளரும் - வளம் பெறும்!

இத்தகு குணநலன்களை கொண்டிருப்பதே
சிறந்த தலைமைப் பண்பின் அடையாளம்.

உடனிருப்போர் சொல்வதை மட்டுமே செய்வர்
எனில்-அதன் பேர் அடியாள் கூட்டம்!

என்ன செய்வது- எப்படிச் செய்வது
என ஆலோசனை கூறுவோரை
உருவாக்குதலே வளர்ச்சிக்கு வழிகோலும்.

மூத்தவர்களை உடனிருத்திக் கொள்வதும்
அவர்களின் வெற்றி தோல்விகளிலிருந்து
கற்றுக் கொள்வதும்
உரியவர்களுக்கு உரிய அங்கீகாரம் தருவதும்
தலைமைப் பண்பின் மாண்புகளாகும்!

தன்னை விஞ்சி விடுவார்களோ
தன்னிலிருந்து மாறுபடுவார்களோ
எனும் அய்யங்கள்
தன்னையே நம்பாதோரின் அச்சங்கள்!

தானைத் தலைவர்களெல்லாம்
தானே தலைவர் என்றே இருக்கின்றனர்.

தலையெடுப்போரை களையெடுப்பதன்றி
தகுதிவாய்ந்த தலைவர்களை உருவாக்குதலே
தலைமையின் தலையாய கடமையாகும்.

# எப்படி... எப்படி?

கடந்த காலத் தோல்விச் சருகுகளை
கையிலேயே வைத்துக் கொண்டிருந்தால்...
நிகழ்காலத்தின் வெற்றிப் பூக்களை
கொய்வது எப்படி ?

செய்ய மறந்ததை நினைத்தே
மனம் வருந்திக் கொண்டிருந்தால்...
புதுமைகளைப் படைத்து
சாதிப்பது எப்படி ?

நடந்துவிட்ட பிழையையே எண்ணி
வேதனையை போர்த்திக் கிடந்தால்...
விடிந்து விட்ட வைகறையில் வீறுகொண்டு
எழுவது எப்படி ?

சின்னஞ்சிறிய கவலைகளையெல்லாம்
நெஞ்சிலேயே தேக்கி வைத்திருந்தால்...
புதுப்புது யோசனைகள் மின்னலாய்
ஒளிர்வது எப்படி ?

களைகளைப் பற்றிய கவனமே இன்றி
அசட்டையாய் சோம்பிக் கிடந்தால்...
விளைய வேண்டிய புதுமைகள்
வளர்ந்திடும் வாய்ப்பை
வழங்குவது எப்படி ?

தொலைந்துபோன சல்லிக் காசுக்காக
கலங்கிப் போய் சோர்ந்திருந்தால்...
அடைந்த புதையலைத் திறந்து
அள்ளுவது எப்படி ?

தவறிப்போன கணிப்புகளுக்காக
கை கட்டி வாளாவிருந்தால்...
சரியாக எடுத்த முடிவுகளுக்காக
கை தட்டுவது எப்படி ?

இந்த இதழில் படித்த விஷயங்கள்
சரியென்று தோன்றுமானால்...
சொந்த வாழ்வில் செயல்படுத்தாமல்
இருந்தால் எப்படி ?

• **அ.தாஜுத்தீன்**, ஆயுள் கைதி எண் : 10662, மத்திய சிறை, கோவை - 18

# மழையும் மனிதர்களும்

• ம. அஹமது நவ்ரோஸ் பேகம்

பருவமழை பொய்ப்பதற்கு, உலக வெப்பமயமாதல், காடுகள் அழிப்பு, மாசுபட்ட சுற்றுச் சூழல் எனப் பல காரணங்கள் சொல்லப்படுகின்றன. இவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்டு மனிதர்களின் சிந்தனை ஓட்டமும் மழை அருகி வருவதற்குக் காரணம்.

மாதம் மும்மாரி பொழிகிறதா? முப்போகமும் விளைந்து மக்கள் மகிழ்ச்சியாக இருக்கின்றார்களா என்று மன்னர்கள் தம் அமைச்சர்களிடம் வினா எழுப்பிய சங்க காலம் நினைவிற்கு வருகிறது. ஆனால், இக்கால மனிதர்களுக்கு மழை என்பது ஒரு விரும்பத்தகாத நிகழ்வாகவே இருக்கிறது.

மழைக் காலத்தில் பெய்யும் மழையைக் கூட வரவேற்க மனமின்றி அற்ப விஷயங்களுக்காக வெறுக்கக் கூடிய மனிதர்களை நாம் பார்க்கிறோம். மழை பெய்கிறதே, நான் மாடியில் துணி காய வைத்திருக்கிறேனே, வடகம் காய வைத்திருக்கிறேனே என்று கவலைப்படுபவர்கள் பலர். இன்று நான் குடை கொண்டுவரவில்லை, மழை பெய்யாமல் இருந்தால் நன்றாக இருக்கும் எனப் புலம்புபவர்கள் சிலர்.

அக்டோபர், நவம்பர் மாதங்களில் திருமணம் செய்ய ஏற்பாடு செய்துவிட்டு அன்று ஒரு நாள் மட்டும் மழை வரக்கூடாது என்று பிரார்த்தனை செய்பவர்கள் எத்தனையோ பேர். மூக்கு பெறாத காரணங்களுக்காக மழை வேண்டாம் என நினைக்கும் விந்தை மனிதர்கள் நிறைந்திருக்கும் இடத்தில் மழை எப்படிப் பொழியும்?

நல்லோர் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லோர்க்கும் பெய்யும் மழை என்பதை மெய்ப்பிப்பதற்காக பெய்யக்கூடிய மழைகூட இம்மாதிரியான மக்களின் பிரார்த்தனைகளால் ஓடி விடுகிறது. நமது எண்ண ஓட்டங்களுக்கு வலிமை உண்டென்பர். ஒரு பேருந்தில் பயணம் செய்பவர்களில் ஒவ்வொருவராக இந்த ஓட்டுநர் என்ன இந்த வேகத்தில் ஓட்டுகிறார்? விபத்து நிகழ்ந்துவிடுமோ என்று அச்சப்படும்போது அவர்களின் எண்ண ஓட்டம் ஓட்டுநரின் கவனத்தைத் திசைதிருப்பி பயணிகள் நினைத்ததுபோல் நிகழ்வதற்குக் காரணமாக அமைகிறது என்கின்றன ஆய்வுகள்.

கடைத்தெருவில் நின்றுகொண்டு மழை பெய்யும்போது நான் எப்படி வீட்டிற்குப் போவேன் என்பவர்களிடம், ஏன் மழையைக் கரித்துக் கொட்டுகிறீர்கள்? மழை நன்றாகப் பெய்யட்டும், மழை பெய்தால்தான் நாடு செழிக்கும் என்று சிரித்துக் கொண்டே கடுகடுத்ததுண்டு. குழந்தைப் பருவத்திலேயே நம் வீட்டுப் பிள்ளைகளிடம் மழை என்பது இறைவனின் அருட்கொடை; மழைக் காலங்களில் நாம் மழையை வரவேற்று நம் மகிழ்ச்சியை வெளிப்படுத்த வேண்டும் என்றும், தொடர்ந்து பெருமழை பெய்யும் காலங்களில் அதன் பாதிப்பிலிருந்து மக்களைக் காப்பாற்ற இறைவனை வேண்டும் பிரார்த்தனைகளைக் கற்றுக் கொடுத்தால் அவர்களுக்கு மழையின் அருமை புரியும். அத்துடன், தண்ணீர் இயற்கை வளங்களுள் ஒன்று என்பதை இளைய சமுதாயத்தினருக்குப் புரிய வைக்க வேண்டும்.

மழலைகள் பள்ளிகளில் 'ரெயின் ரெயின் கோ அவே' (மழையே மழையே போய்விடு) என்று பாடுவதை நிறுத்தினால் நலம். மேலும், மழை பெய்து பள்ளி விடுமுறை விட்டாலும் சரி அல்லது மழையில் நனைந்துகொண்டே பள்ளிக்குச் சென்றாலும் சரி மகிழ்ச்சி அடைபவர்கள் குழந்தைகளே என்பதால் கொஞ்சநஞ்சம் பெய்யும் மழையால் புண்ணியம் கட்டிக் கொள்பவர்கள் அவர்களே. அது போல பத்திரிகையாளர்கள் இன்று மழை பெய்யும் என்று போடாமல் இருந்தால் மழை நன்றாகப் பெய்யும்!

அவ்வையாரின் நீர் உயர வரப்புயறும்; வரப்புயுற நெல் உயரும்; நெல் உயர கோன் உயர்வான்; கோன் உயர குடி உயர்வான் என்ற தண்ணீரின் முக்கியத்துவத்தைப் பற்றிய பாடல்களை பெரியவர்கள் குழந்தைகளுக்குப் பிடித்த கதை வடிவில் கூறினால், தலைமுறை தலைமுறையாக மக்கள் மழையின் முக்கியத்துவத்தைப் பற்றி உணர்வார்கள். மரக்கன்றுகள் நடுவது, சுற்றுப்புறம் மாசுபடாமல் இருப்பதற்கு மாணவர்களின் பங்கு ஆகியவற்றைப் பற்றி ஆசிரியர்கள் அவர்களுக்கு விளக்க வேண்டும். மேலும், குளிர்ந்த காற்றினை உணரும் போதும், திரண்டு வரும் கருமேகக் கூட்டங்களைக் காணும்போதும் மனம் கொள்ளா மகிழ்ச்சியுடன் அல்ஹம்துலில்லாஹ் - எல்லாப் புகழும் இறைவனுக்கே என்று சொல்லிப் பாருங்கள். இன்ஷாஅல்லாஹ் மழை கொட்டும்.

*போர்க்களத்தின் செய்திகள் தொடர் பாலஸ்தீன யுத்தத்தின் படிப்பினைகளை பிழையற்ற வரலாறு அறிதலிலிருந்து தொடங்கியிருந்தோம். நேரிலும், அலைப்பேசியிலும் பல ஆலோசனைகளை வழங்கிய வாசகர்கள் இந்த வரலாற்றுச் செய்தியை மிக விரிவாய் எழுதுமாறு கேட்டுக்கொண்டார்கள். வரலாறு முழுமையாகச் சொல்லப்படவேண்டும்தான். ஆனால் அந்த மிகப்பெரும் முயற்சிக்குள் நாம் இப்போது செல்லவில்லை. வாசகர்களின் ஆலோசனையைக் கருத்தில் கொண்டு பாலஸ்தீன வரலாற்றின் மிக முக்கியப் பக்கங்களை மட்டும் சற்று விரிவாய்ச் சொல்ல முனைகின்றோம். பாலஸ்தீனம் தொடர்பான வரலாற்றுத் தகவல்கள், நூல்கள் இருப்பின் தெரியப்படுத்தினால் நன்றாய் இருக்கும். கருத்துகளுக்கும், தகவல்களுக்கும்...* vsmdameen@gmail.com

உங்கள் வீட்டில் நீங்கள் நிம்மதியாய் வாழ்ந்து கொண்டிருக்கின்றீர்கள். வீடற்ற நாடோடிக்கூட்டம் ஒன்று உங்கள் வீட்டுத் திண்ணையில் அமர்ந்து தண்ணீர் கேட்கிறார்கள். நீங்கள் பாவப்பட்டு தண்ணீர் தருகையில் பளாரென்று உங்களை அறைகின்றார்கள். ''இது எங்கள் மூதாதையர் வாழ்ந்த இடம். இது எங்களுக்குத்தான் சொந்தம்''என்று உங்களை வம்படியாய் வெளியேற்றுகிறார்கள். வெளியேற மறுத்த உங்களை அடிக்கிறார்கள். தீப்பந்தங்களை உங்கள் வீட்டில் எரிகிறார்கள். உங்கள் குழந்தைகளைக் காலால் மிதிக்கின்றார்கள்.உங்கள் பெண்களைச் சித்ரவதை செய்கிறார்கள்.

உங்கள் வட்டாரப் பஞ்சாயத்துத் தலைவர் 'சமாதானமா போங்கப்பா' என்று சொல்கிறார். ஊர் நாட்டாண்மை ''உங்கள் வீட்டின் பாதிக்கும் அதிகமாக அந்த நாடோடிகளுக்குக் கொடுத்து விடுங்கள்'' எனத் தீர்ப்பெழுதிச் செல்கிறார். நாடோடிக்கும்பல் அந்த வீட்டாரை மீண்டும் அடித்துத் துன்புறுத்தி வீட்டின் பெரும் பகுதியை அபகரித்துக் கொள்கின்றனர். உங்கள் பக்கத்து வீட்டுக்காரர்கள் 'எதுக்கு வம்பு எங்களுக்கு இருவரும் ஒன்றுதான்' என்று வேடிக்கை பார்க்கின்றார்கள். தெருவில் நின்று வேடிக்கைபார்ப்பவர்கள் ''எதுக்கு இவங்க கிட்ட அடிவாங்கிச் சாகணும்.பேசாம வீட்ட எழுதிக் கொடுத்திட்டு திண்ணையில வந்து உட்கார்ந்து கொள்ள வேண்டியதுதானே'' என நியாய தர்மம் பேசுகிறார்கள்.

இதுதான் பாலஸ்தீனத்தின் சுருக்கமான வரலாறு.

ஆம்! பூமிப்பந்தில் தனக்கென துண்டு நிலமில்லாமல் இரண்டாயிரம் ஆண்டுகளாக நாடோடிகளாகத் திரிந்த யூத இனம் பாலஸ்தீனத்தில் வம்படியாக உள்ளே நுழைந்து, பணத்தை வாரி இறைத்து நிலங்களை அபகரித்து, சதித் திட்டங்களால் சுற்றிவளைத்து, வன்முறை வெறியாட்டத்தால் காலூன்றி, ஆங்கிலேய ஏகாதிபத்திய துணைகொண்டு உரிமை கொண்டாடியது.

முதல் உலகப்போருக்குப் பிறகு பாலஸ்தீனத்தில் ஆங்கிலேய ஏகாதிபத்தியம் ஆதிக்கம் செலுத்தியது. 1948 மே மாதத்தில், பிரிட்டன் அரசு பாலஸ்தீனப் பகுதியை விட்டு வெளியேறியது. அப்போது அரபு மக்களுக்கும் யூத மக்களுக்கும் இடையே நிலவிய உடைமைக் கோரிக்கையைத் தீர்த்துவைக்குமாறு ஐக்கிய நாடுகள் அவையைக் கேட்டுக்கொண்டது. 1947, நவம்பர் மாதம் ஐ.நா. '181ஆம் தீர்மானம்' என்னும் முடிவை வெளியிட்டது.

அதன்படி, பாலஸ்தீனப் பகுதி அரபு நாடு என்றும் யூத நாடு என்றும் இரு நாடுகளாகப் பிரிக்கப்பட வேண்டும். ஜெரூசலம் நகரம் 'தனி நிலப்பகுதி' (corpus separatum) என்னும் சட்ட நிலை, அரசியல் நிலை பெறவேண்டும். அது ஐ.நா. அவையால் நிர்வகிக்கப்படும். அது 1947இல் வெளியிடப்பட்ட 'பாலஸ்தீனத்தைப் பிரிப்பது பற்றிய ஐ.நா. திட்டம்' என்னும் ஆவணத்தின்படி அரபு நாடு மற்றும் யூத நாடு ஆகியவற்றின் கட்டுப்பாட்டுக்கு உட்படாவகையில் அமையும். இதுவே ஐ.நா. வெளியிட்ட '181ஆம் தீர்மானம்' என்னும் முடிவின் சுருக்கம்

இரு நாடுகளாகப் பிரிப்பது என்னும் திட்டத்தை உலக நாடுகளின் பேரவை 1947 நவம்பர் 29இல் ஏற்றது. பிரிட்டனின் ஆட்சி உரிமை 1948 மே 15 பிற்பகல் 5 மணிக்கு முடிவடையும் முன்னரே, 1948 மே 14, இசுரேலிய நாடு உருவானதாக யூதர்கள் அறிவித்தார்கள். யூத பயங்கரவாத அமைப்பின் செயல் தலைவரும், இஸ்ரேலுக்கான யூத முகவர் அமைப்பின் தலைவருமான டேவிட் பென்கூரியன் (David BenGurion) தற்காலிகமாக பொறுப்பை ஏற்றுக்கொண்டார். ஆனால் அரேபியர்களின் குழு (Arab League) இதனை ஏற்க மறுத்தது. இதைத் தொடர்ந்து அரேபியர்கள் யூதர்களின் மீதும், யூதர்கள் அரேபியர்களின் மீதும் நடத்திய தாக்குதல்களின் விளைவாகப் பரவிய உள்நாட்டுப் போர், 1948க்கான இசுரேலியப் போரின் முதல் கட்டமாக அமைந்தது.

நாடற்றுத் திரிந்த நாடோடிகளுக்கென்று ஒரு நாட்டை களவாடிக்கொண்டு உருவாக்கியாயிற்று.



**முதல் இஸ்ரேலியப் பிரகடனம் : டேவிட் பென்கூரியன் பொறுப்பேற்றுக் கொண்ட போது... (தியோடர் ஹெஸிலின் புகைப்படத்தையும் கவனத்தில் கொள்க)**

போர்க்களத்தின் செய்திகள்-5

# கலகக்காரர்களின் சிம்மாசனம்

● வி.எஸ்.முஹம்மத் அமீன்

அத்துடன் இந்த வரலாறு முடிந்துவிட வேண்டுமல்லவா..? ஆனால் சியோனிச யூத பயங்கரவாதிகள் இப்போதுதான் யுத்தத்தைத் தொடங்குகின்றார்கள். அன்றிலிருந்து இன்றுவரை பாலஸ்தீன் குண்டுகளாலும், ஏவுகணைகளாலும் சிதைக்கப்பட்டு, கொலைக்களமாக இரத்தத்தில் மிதந்து கொண்டிருக்கின்றது.

1948 ஏப்ரல் 9 ஆம் நாள் மேனேச்சம் பிகின், யஷ்திக் ஷமீர் என்ற இரு சியோனிச பயங்கரவாதிகள் வே யாசீன் கிராமத்தைச் சூறையாடினார்கள். குழந்தைகளைக்கூட விட்டுவைக்கவில்லை. தீயிட்டுக் கொளுத்தினார்கள். கருவிலிருக்கும் சிசுவைக்கூட கருவறுத்தார்கள். எஞ்சியவர்களை நிர்வாணமாக்கி ஊர்வலமாய் அழைத்து ''மற்றவர்களுக்கும் இதுதான் கதி'' என எச்சரித்தார்கள். மெய்ன் போ அர்ன் என்பவர் இக்கொடூரத்திற்கு நேரடி சாட்சியாக இருந்ததை 24 ஆண்டுகளுக்குப் பிறகு வெளியிட்ட தமது நூலில் பதிவு செய்கிறார்.

The Revolt (கிளர்ச்சி) எனும் நூலில் மேனேச்சம் பிகின் 'இந்தப் படுகொலைகள் நியாயமானவை மட்டுமல்ல; இதுதான் இஸ்ரேலின் வெற்றிக்கு அடித்தளமிட்டது' என்று குறிப்பிடுகின்றான். தீவிரவாதத்தின் தந்தை என்ற இந்த மேனேச்சம் பிகினுக்கு 1978 ஆம் ஆண்டில் அமைதிக்கான நோபல் பரிசு கிடைக்கிறது. இஸ்ரேலின் காலடியில் சாஷ்டாங்கமாய் விழுந்து சரணடைந்த எகிப்தின் அன்வர் அல் சதாத்திற்கும் இதே ஆண்டு அமைதிக்கான நோபல் பரிசு கிடைக்கிறது. மட்டுமல்ல 1977 முதல் 1983 வரை இஸ்ரேலின் பிரதமரும் இந்த மேனேச்சம் பிகின்தான். வே யாஸீனிலிருந்து ஷாப்ரா, ஷத்தீலா அகதிகள் முகாமில் கொடூரக் கொலைபுரிந்த யஷ்திக் ஷமீர் 1983க்கு பிறகு இஸ்ரேலின் பிரதமராகின்றான். (கலகத்தீயை மூட்டி வன்முறையை கட்டவிழ்த்துவிடும் கலகக்காரர்களுக்கான சிம்மாசனம் ஃபிர்அவ்னிலிருந்து இன்றுவரை தொடர்கிறது).

1947 க்குப்பிறகான வன்முறைகள் அளவில்லாமல் தொடர்ந்தன. எகிப்து, ஜோர்டான், சிரியா, லெபனான், ஈராக் ஆகிய அரபு நாடுகள் இஸ்ரேலின் மீது படையெடுத்தன. இதில் இஸ்ரேலின் கை ஓங்கியது.1949 ஜனவரி ஏழாம் தேதி தற்காலிக யுத்த நிறுத்தம் ஏற்படுகிறது. 1956 ஆம் ஆண்டில் மீண்டும் பெரும் தாக்குதல். பிறகு 1967 ஆம் ஆண்டு ஆறுநாள் யுத்தம் நடைபெற்றது. கட்டம் கட்டமாய்த் தொடர்ந்த இந்த நில அபகரிப்பு 6 விழுக்காட்டிலிருந்து 87 விழுக்காடு நிலம் யூதர்கள் வசம் சென்றுவிட்டது. ஐ நா சபை தெரிவித்த ஆலோசனைக்கு நேர் மாற்றமாக ஜெரூசலம் நகரின் பாதிப் பகுதியை இஸ்ரேலியர்கள் தங்கள் கட்டுப்பாட்டிற்குக் கீழ் கொண்டு வந்தனர். 1947 நவம்பரிலிருந்து 1957 ஆம் ஆண்டிற்கு இடைப்பட்ட காலத்தில் மட்டும் ஐ நா சபையின் 28 தீர்மானங்கள் தோற்றுப் போனது.1948 லிருந்து 1966 வரை இஸ்ரேலுக்கு எதிராக ஏழு முறை கண்டனத் தீர்மானங்களை இயற்றியது.

இஸ்ரேல் ஐநா விற்கு மட்டுமல்ல. உலகத்தின் எந்த நியாய தர்மத்திற்கும் கட்டுப்படாது என்பதற்கு மிகச்சிறந்த உதாரணம் இஸ்ரேலிய நாடாளுமன்றத்தின் தலைவாசலில் எழுதப்பட்ட வாசகம்தான். ''இஸ்ரவேலரே..! உன்னுடைய எல்லைப்பகுதி நைல்நதியிலிருந்து ஃபுராத் நதி வரை பரவியுள்ளது'' என்பதே அந்த வாசகம். மற்ற நாடுகளுக்குள்ளும் எங்களுக்குச் சொந்தமான நிலம் இருக்கின்றது. அதை எப்போது, எப்படி வேண்டுமானாலும் நாங்கள் அடையலாம் என்று எழுதுகிறது என்றால் இந்த முரட்டுத்தனத்தை என்ன சொல்வது?

திருடப்பட்ட நிலத்திற்கு இஸ்ரேல் என்ற அங்கீகாரம். பாலஸ்தீனத்திற்கான ஐ நா சபையின் உறுப்பினர் அங்கீகாரம் இல்லை. 2012 ஆகஸ்ட் மாதத்தில் பாலஸ்தீன வெளியுறவு அமைச்சர் ரியாத் அல்மால்க்கி, பாலஸ்தீனம் ஐ.நா. பொது அவையில் 'உறுப்பினர் நிலை இல்லா, பார்வையாளர் நிலை பெறுவதற்கு விண்ணப்பித்தார். 2012 நவம்பர் மாதம் 29ஆம் நாள் ஐ.நா. பொதுப் பேரவை 67/19 தீர்மானத்தை நிறைவேற்றி, பாலஸ்தீனத்துக்கு 'அமர்வோர்'(entity) நிலையிலிருந்து 'உறுப்பினர் இல்லா, பார்வையாளர் நாடு (non-member observer state) என்னும் நிலையை வழங்கியது. தீர்மானத்தை ஆதரித்து வாக்களித்த நாடுகள் 138. எதிர்ப்பு வாக்குகள் 9; நடுநிலை வகித்த நாடுகள் 41. இவ்வாறு பாலஸ்தீனம் இறையாண்மை கொண்டநாடு என்பது உள்முகமாக ஏற்கப்பட்டது. இந்த உடன்பாட்டிற்கு ஆஸ்லோ ஒப்பந்தம் பெரிதும் துணைநின்றது.

அந்த ஒப்பந்தம் போடப்பட்ட நிலை என்ன? அந்த ஒப்பந்தத்தை யூதர்கள் எப்படியெல்லாம் மீறினார்கள்? அதன்பிறகு குழப்பங்கள் எப்படிச் சூழ்ந்தன? என தொடர்ந்து பயணிப்போம்.

**(செய்திகள் தொடரும்)**

# SIOவின் புதிய மாநில ஆலோசனைக் குழு உறுப்பினர்கள்


M.சையத் அபுதாஹிர்


S.பக்கீர் முஹம்மத்


K.சிராஜுல் ஹஸன்


H.சிக்கந்தர் பாஷா


H.நிசார்


மௌலவி பி. முஹம்மத் நாசர் புகாரி


முனைவர் M.ஸலாஹுத்தீன்


A.பீர்முஹம்மத்


M.சுபேர்


A.நுஃமான் அக்ரம்

இந்திய மாணவர் இஸ்லாமிய அமைப்பின் 2015 - 2016 ஆம் ஆண்டுக்கான புதிய மாநில ஆலோசனைக் குழு உறுப்பினர்கள் தேர்வு செய்யப்பட்டுள்ளனர். நவம்பர் 1,2 ஆகிய இரு நாள்களாக கோவையில் நடைபெற்ற மாநில உறுப்பினர்கள் முகாமில் இதற்கான தேர்தல் நடைபெற்றது. எஸ்.ஐ.ஓ.வின் மாநிலக் காப்பாளர் ஏ. ஷப்பீர் அஹ்மத் தலைமை தாங்கினார்.

எம்.சையத் அபுதாஹிர் Msc, M.Phil.,B.A (திருச்சி)

எஸ்.பக்கீர் முஹம்மத் M.sc.,M.Phil (திருச்சி)

கே.சிராஜுல் ஹஸன் M.A, M.Phil (சென்னை)

ஹெச்.சிக்கந்தர் பாஷா B.A.,MSW (கோவை)

ஹெச். நிசார் B.E. (கோவை)

மௌலவி பி. முஹம்மத் நாசர் புகாரி (தஞ்சை)

முனைவர் எம்.ஸலாஹுத்தீன் M.Sc, Phd. (மேட்டுப் பாளையம்)

ஏ. பீர்முஹம்மத் M.E.(திருச்சி)

எம். சுபேர் M.Sc, M.Phil (மேட்டுப்பாளையம்)

ஏ. நுஃமான் அக்ரம் M.S.W.(வாணியம்பாடி)

# ஹிஜாப் வாரம்: சமூக ஆர்வலர்களுடன் சந்திப்பு

ஜமாஅத்தே இஸ்லாமி ஹிந்த் தமிழக மகளிரணியின் சார்பாக மாநிலம் தழுவிய அளவில் ‘ஹிஜாப்’ விழிப்பு உணர்வுப் பரப்புரை இயக்கம் நவம்பர் 8 முதல் நடந்து வருகிறது. இதனை முன்னிட்டு கோவை மாநகர ஜமாஅத்தே இஸ்லாமி ஹிந்த் மகளிரணியினர், சமூக ஆர்வலர்களைச் சந்தித்து ஹிஜாபின் முக்கியத்துவத்தை எடுத்துரைத்தனர். அவர்களின் கருத்துகளையும் கேட்டறிந்தனர்.

சிறுதுளி அமைப்பின் இயக்குநர் வனிதா மோகன், கோவை அரசு மகளிர் பாலிடெக்னிக் முதல்வர் அ.கௌஷியா ஜபீன், சாந்தி ஆஷ்ரம் இயக்குநர் டாக்டர் வினு அறம், சுற்றுச்சூழல் ஆர்வலர் சித்ரா கிருஷ்ணசாமி, அற்புத பால்ராணி ஆகியோரைச் சந்தித்து உரையாடினர்.



# வாழ்வியல் கண்காட்சி இலச்சினை வெளியீட்டு விழா!

ஜமாஅத்தே இஸ்லாமி ஹிந்த் சென்னை மண்டலத்தின் சார்பாக டிசம்பர் 25-28 வரை நடைபெறவுள்ள 'அமைதியை நோக்கி... வாழ்வியல் கண்காட்சியின் இலச்சினை வெளியிட்டு விழா 9.11.2014 அன்று சென்னை அண்ணா சாலையில் உள்ள உமாபதி கலையரங்கில் நடைபெற்றது.

ஜமாஅத்தின் தமிழகத் தலைவர் ஏ .ஷப்பீர் அஹ்மத் லோகோவை வெளியிட்டார். இஸ்லாத்தின் செய்தியை அனைத்து மக்களுக்கும் கொண்டுசேர்க்க வேண்டும் என்ற நன்னோக்கத்தின் அடிப்படையில் நடைபெறுகின்ற இந்தக் கண்காட்சி மகத்தான வெற்றி பெற அனைவரும் பம்பரமாய்ச் சுழல வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார்.




கண்காட்சிக்காக இணையதளமும் உருவாக்கப்பட்டுள்ளது. இணைய தள முகவரி :www.jih-exhibition.com

# மாறுவோம்... மாற்றுவோம்...! சிறப்பு நிகழ்ச்சி

ஜமாஅத்தே இஸ்லாமி ஹிந்த் பெரம்பூர் கிளையின் சார்பாக மாறுவோம்... மாற்றுவோம்...! என்ற தலைப்பில் இளைஞர்களுக்கான சிறப்பு நிகழ்ச்சி 26.10.2014 அன்று சென்னையில் நடைபெற்றது. மௌலவி முஹம்மத் முஸ்ஸம்மில் இறைவசனங்களை ஓதி நிகழ்வைத் தொடங்கி வைத்தார். கிளைத் தலைவர் ஏ.ஆர்.சையத் சுல்தான் தலைமை தாங்கினார். மாறி வரும் சூழலில், இளைஞர்கள் தங்களின் இலட்சியத்தை உணர்ந்து, பாதை தவறிவிடாமல் பயணிக்க வேண்டும். அதற்கு வழிகாட்ட ஜமாஅத்தே இஸ்லாமி தயாராக இருக்கிறது எனக் குறிப்பிட்டார்.

சென்னை மண்டலத் தலைவர் கே.ஜலாலுத்தீன், சமூக மாற்றத்திற்கு ஜமாஅத்தே இஸ்லாமி ஹிந்த் ஆற்றிய பங்களிப்பு என்ற தலைப்பில் சிறப்புரை ஆற்றினார். இஸ்லாமிய அழைப்புப் பணியில், சமூக சேவைப் பணிகளில், தீனை நிலைநாட்டும் பணியில் ஜமாஅத் ஆற்றிய பங்களிப்பைப் பட்டியலிட்ட அவர், கூட்டமைப்பாகச் சேர்ந்து செயல்பட இளைஞர்கள் முன்வர வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார்.

இஸ்லாத்தின் வளர்ச்சிக்கு இளைஞர்கள் ஆற்றிய பங்கு என்ற தலைப்பில் நூஹ் மஹ்ழரி எழுச்சியுரை ஆற்றினார். இளம் வயது நபித்தோழர்கள் ஆற்றிய தியாகத்தை ஒவ்வொன்றாக அவர் பட்டியலிட்டபோது, உணர்ச்சிப் பெருக்கால் பார்வையாளர்களின் கண்களில் நீர் வழிந்தோடியது.

'மாறுவோம்... மாற்றுவோம்...! என்ற தலைப்பில் டாக்டர் கேவிஎஸ் ஹபீப் முஹம்மத் சிறப்புரை ஆற்றினார். முஸ்லிம்களின் இன்றைய நிலையைத் துல்லியமாகப் பட்டியலிட்ட அவர், அவற்றை மாற்றியமைக்க அனைவரும் ஒருங்கிணைந்து உழைக்க வேண்டும் எனக் கேட்டுக்கொண்டார். பார்வையாளர்கள் தொடுத்த வினாக்களுக்கு அழகிய முறையில் விளக்கங்கள் தரப்பட்டன. அஜீஸ் லுத்ஃபுல்லாஹ் நன்றி கூறினார். அஷ்ரஃப் அலீ நிகழ்வை ஒருங்கிணைத்தார். இதில் ஏராளமான இளைஞர்கள் பங்கேற்றனர்.

# கிருஷ்ணகிரியில் நன்னெறிப் பயிற்சி முகாம்

ஜமாஅத்தே இஸ்லாமி ஹிந்த் கிருஷ்ணகிரி கிளையின் சார்பாக இயக்கத் தோழர்களுக்கான நன்னெறிப் பயிற்சி முகாம் நடைபெற்றது. ஜமாஅத்தின் புதுச்சேரி மண்டல அமைப்பாளர் அப்துல் ஹமீத் திருக்குர்ஆன் விரிவுரை ஆற்றினார். கிளைத் தலைவர் இர்ஷாத் அஹ்மத் தொடக்கவுரை ஆற்றினார்.

'இயக்க ஊழியர்களின் பொறுப்புகளும் அடைய வேண்டிய படித்தரங்களும்' என்ற தலைப்பில் மாநில ஆலோசனைக் குழு உறுப்பினர் சையத் அஹ்மத் ஹுஸைனி சிறப்புரை ஆற்றினார்.

பிற்பகல் அமர்வில், 'இஸ்லாமிய இயக்கத்தை முன்னெடுத்துச் செல்ல... என்ற மையக்கருத்தில் கருத்தரங்கம் நடைபெற்றது. பலம் என்ன? பலவீனம் என்ன? வாய்ப்புகள் என்ன? தடைகள் என்ன? ஆகிய நான்கு தலைப்புகளில் உறுப்பினர்களும் ஊழியர்களும் கருத்து மழை பொழிந்தனர். இந்தக் கலந்துரையாடல் மிகவும் பயன் தந்தது. 'அல்லாஹ் விரும்பும் பண்புகள்' என்ற தலைப்பில் சிறப்புரை ஆற்றினார் சையத் அஹ்மத் ஹுஸைனி. கிளைத் தலைவர் நிறைவுரையுடன் முகாம் நிறைவுற்றது.

# அழகிய பண்புகளோடு வாழ்ந்த முஹம்மத் அக்பர் சாஹிப்



முஹம்மத் அக்பர்

“ரஹ்மானின் (உண்மையான) அடியார்கள் பூமியில் பணிவோடு நடப்பார்கள்” என்ற திருக்குர்ஆன் வசனத்தை நினைவுகூர்கின்ற ஆளுமைகள் சிலர் நமக்கிடையில் உள்ளனர். அவர்களில் ஒருவர்தாம் அக்டோபர் 29 அன்று இவ்வுலகைவிட்டுப் பிரிந்த அப்பா பிள்ளை முஹம்மத் அக்பர் சாஹிப். ‘பணிவோடு வாழ்ந்தவர்களுக்கு அல்லாஹ் அருள்புரியாமல் இருப்பதில்லை’ என்றொரு நபிமொழி உள்ளது. இஸ்லாமிய இயக்கத்தினரும் இயக்கத்தைச் சாராதவர்களும் அவர் மீது பொழிந்த அன்புக்கு அதுவே ஆதாரம்.

தமிழக ஜமாஅத்தே இஸ்லாமியின் வரலாற்றில் முக்கியப் பங்கு வகித்த அவர், பொது மேடைகளை விட்டும், புகழ்பெறும் நிகழ்வுகளை விட்டும் சற்று விலகியே பயணித்தார். மிக அமைதியான முறையில் பணியாற்றும் இயல்புடைய அவர், பழகுவதற்கு மிக எளிமையானவர்.

தனது இளமைப்பருவத்திலேயே இஸ்லாமிய இயக்கத்துடன் இணைந்த அவர், தம் இறுதி மூச்சு வரை இஸ்லாமிய அழைப்புப் பணிக்காகத் தம் வாழ்வை அர்ப்பணித்தவர். இளம் தலைமுறையினருக்கு சரியான பாதையைக் காட்டி, இஸ்லாமிய இயக்கத்துக்குச் சிறந்த ஆளுமைகள் பலரை வார்த்தெடுத்தவர்.

அறுபத்தெட்டு வயது இளைஞரான அக்பர் சாஹிப், ஜமாஅத்தே இஸ்லாமி ஹிந்தின் முகப்பேர் கிளைத் தலைவர், குட்வேர்ட் எஜுகேஷனல் ட்ரஸ்டின் நிறுவன அறங்காவலர்; அதன் பொதுச் செயலாளர் எனப் பல நிலைகளில் திறம்படச் செயலாற்றியவர். குட்வேர்ட் பப்ளிக் ஸ்கூலை உருவாக்குவதில் பெரும் பங்கு வகித்தார்.

சென்னை முகப்பேரில் இஸ்லாமிய நூலகம் ஒன்றை 2001ஆம் ஆண்டில் தொடங்கி, சகோதர சமுதாயத்தைச் சார்ந்த அன்பர்கள் இஸ்லாத்தைக் குறித்து அறிந்து கொள்ள அக்கறை காட்டினார். நூலகத்தை அழைப்புப் பணியின் மையமாகத் திகழச் செய்தார். அந்த நூலகத்தின் வாசகர்களுக்காக வாரந்தோறும் வைகறைத் தொழுகைக்குப் பிறகு திருக்குர்ஆன் விரிவுரை வகுப்புகளை நடத்தினார். சகோதர சமுதாயத்தினர் அதில் மகிழ்ச்சியுடன் கலந்துகொள்ளும் வகையில் ஊக்குவித்தார். கடந்த 13 ஆண்டுகளாக இந்தக் குர்ஆன் விரிவுரை நிகழ்ச்சி தொடர்ந்து நடைபெறுகிறது.

அவர் ஒவ்வொரு மாதமும் குடும்ப இஜ்திமாவை நடத்தி, உறவுகளைப் பேணிய விதம் மெய்சிலிர்க்க வைக்கிறது. நம் அனைவருக்கும் அதில் படிப்பினை இருக்கின்றது. சிறந்த விருந்தோம்பல் பண்புடைய அவருக்கு மனைவியும், ஏழு பிள்ளைகளும் உள்ளனர். அவர்கள் அனைவருமே இஸ்லாமிய இயக்கத்தின் களவீரர்களாக உள்ளனர்.

இறையச்சம், செயல்திறன், உளத்தூய்மை, எளிமையான வாழ்வு என்ற அழகிய பண்புகளுக்குச் சொந்தக்காரர் அவர். அக்பர் சாஹிபின் பிழைகளை வல்ல இறைவன் மன்னித்து அருள்புரிய வேண்டும். அவரது மறுமை வாழ்வு சாந்தியும் சமாதானமும் நிறைந்ததாக, சுவனத்தின் அருள்மழையில் நனைந்ததாக அமைய வேண்டும் என அல்லாஹ்வைப் பிரார்த்தனை செய்கிறேன்.

**- ஏ. ஷப்பீர் அஹ்மத்,**

**மாநிலத் தலைவர், ஜமாஅத்தே இஸ்லாமி ஹிந்த், தமிழ்நாடு & புதுச்சேரி**

Published by H. Abdur Raqeeb on behalf of Creative Communication Chennai, 138 Perambur High Road, Chennai -12.
Printed at Bharani Offset Printers, 77, Venkatathiri Street, Chennai - 12. Editor : H. Abdur Raqeeb.